உ

# கவிக்குலக் காவலன்

இது
மதுரைக் கல்லூரித் தமிழாசிரியராயிருந்து,
தற்பொழுது சோழவந்தான் போர்டு ஹைஸ்கூல்
தலைமைத் தமிழாசிரியராகவிருக்கும்
க. பழநிக்குமாரப்பிள்ளையால்
எழுதப்பெற்றது.

V.S. Ranganathan.
VI. Form









—

[விலை அணா 10.

1928.

# INTRODUCTION.

I know the writer, Pandit Palanikumaru Pillai well enough. He is the son and literary heir of his late father Kandasamy Kavirayar, the well known Tamil Poet of Saitur Samastanam. The Young Pandit has talents and heredity to inspire him to emulate his forbears. He pressed me to write an introduction to this small book, which is the second fruit of literary efforts. This book, unlike its many modern companions from sundry aspiring Bohemians, is fairly readable. It is a fair sample of the author's attempt at a simple yet literary style. Being but a phase of Rama's life, the story of the little book should, of course, encourage the interest of young readers of Tamil India, so far as it goes. Not withstanding a few indications of the ordinary desire for ornaments of the youthful aspirants in the style here and there in the book, it is yet fairly free from the many faults that usually characterise literary adolescence.

It is full of promise under encouraging environments. The little book with its lovely story will afford wholesome reading for young pupils. It may well be a text book for boys in the Secondary Schools. I wish the Pandit all success in life.

PASUMALAI,
21—4—28.

S. S. BHARATI M. A. B. L.
Hight Court Vakil.

# முகவுரை.

உலகத்தவரால் பெரிதும் கொண்டாடப்படும் இதிகாசங்கள் இராமாயணமும் பாரதமுமாம். அவற்றுள், இராமாயணத்தை வான்மீகி மகாமுனிவர் வடமொழியிற்பாடியருளினுர். அவரது கதைப்போக்கை யாதாரமாகக்கொண்டு, கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமான் தமிழில் இராமாயணத்தை ஒரு பெருங்காப்பியமாகப்பாடியருளினுர். காவியத்தின் சிறப்பியல்புகளை யான் கூறுவது மிகையாம்.

நிற்க, அவரதுஇராமாயணத்தில்உத்தரகாண்டமொழிந்த மற்றை ஆறுகாண்டங்களுமுள. அவற்றுள், 'கவிக்குலக் காவலன்' என்னுமிச்சிறு நூலின் கதைப்போக்கு, கிஷ்கிந்தா காண்டத்திலுளதாகும். ஏனைக்காண்டங்களிலுள்ள கதைப் போக்குகளைக்காட்டிலும், கிஷ்கிந்தாகாண்டத்திலுள்ள (இச் சிறு நூலின்) கதைப்போக்கானது பல அரியநீதிகளைக்கொண் டுளதென்பதனை எவருமறுத்தற்கியலாது.

இச்சிறு நூலில் சகோதரவாஞ்சை, பெரியாரைத்துணைக் கோடலால்வரும் பயன், நட்பின்பெருமை, அல்லவை செய் தார்க்கறங்கூற்றமாம் என்னுமுண்மை, சுத்தவீரரது உயர் நிலை, என்னுமிவையும், இன்னுமிவைபோல்வனபலவும் இனிது புலப்பட என்னுலியன்றவரை முயன்று எழுதியுளேன்.பண்டிதர்கள் கம்பர்பெருமானது செஞ்சொற் கவியின்பத்தை

நுகர்ந்திருப்பார்களாகையால் அவர்கட்கு அக்கவிகளைப் பின்பற்றி யானெழுதியிருக்கும்வருணனைப்பகுதி அத்துணையின்பம் பயவாது. எனினும், அது மாணவர்கட்குச்சிறிது அளவேனும் செய்யுட்பாகங்களிலுள்ள வருணனைகளைப்பின்பற்றுதற்கு உபயோகமாகவிருத்தல் கூடுமென்றுன்னி வரைந்துள்ளேன்.

ஆதலாலிதனைப் பாடப்புத்தகமாகவைத்து என்னைத் தமிழபிமானிகள் ஊக்குவார்களென்னுந்துணிபுடையேன்.

மதுரை.
24—4—28.

இங்ஙனம்,
க. பழநிக்குமரன்.



உ

குமரன் துணை.

# கவிக்குலக் காவலன்.

## முதலாவது அத்தியாயம்.

திருமாமகட்கு ஒருமா முகமெனத்திகழும் கோசல நாட்டை வறிஞனேனும்புமோர் செய்யெனக்காத்து அரசு புரிந்து வந்த, தசரதச் சக்கரவர்த்தியின் திருக்குமாரனாகிய இராமன், தன் சிற்றன்னை பணியைத் தலைமேற்றாங்கிக் கானகமார்க்கமாய்ப் போதரும் வழியில், மதங்கமா முனிவ ராச்சிரமத்தை யடைந்தான். அவ்வாச்சிரமத்துள்ள சபரி யென்னும் மாதவத்தாட்டி இராமலிலக்குமணர்களின் நல் வரவையறிந்து வரவேற்றனள். பின்பு கனிவர்க்கங்களுடன் அவர்கட்கு விருந்தளிக்க, அவற்றையுண்டு, சில நாள் அங் கேயே வதிந்தனர். பின்னர் அம்மாதவத்தாட்டியால் சுக்கிரீ வன் வரலாற்றைச் செவியேற்று, அன்னவனுடன் நட்புக் கொள்ளும் பொருட்டு, விடை பெற்றுக்கொண்டு புறப்பட் டனர். வரும் வழியில், தெய்வப்புலமை யுடையார், தாம் நாட்டிய சொல்லின் கண்ணுள்ள பொருள் ஆழம்போலும் ஆழ மிக்குடையதும், கரைநின்று நோக்குவார்க்கு நாக ருலகத்திலுறைவாரது மணிச்சுடிகையைத் தெற்றெனத் தெரியக் காட்டுவதான தெளிந்த நீருடையதும், கொழுந் தேன் கெழுமிய செந்தாமரை, செதாம்பல், குவளை முதலிய உயர்வகை மலர்கள் பலவுறக்கொண்ட பொலிவுடையதும்,

ஆடுவாரது பாவங்களைப்போக்கிப் புண்ணியமுதவும் அருமை யுடையதுமான, பம்பையென்னும் ஒரு பெரும் பொய்கைக் கரையையணுகினர்.

### அவர்கள் வரவால் அங்கு நிகழ்ந்தவை.

பொய்கைக் கரையையணுகிய இராமலிலக்குமணர் களைக் கண்டு, தாமரையைப் பள்ளியெனக்கொண்டுவைகும் அன்னங்களிற் சில, "யாம் இவ்விருவீரனுடைய இன் னுயிர்த்துணையான எழிற் சனகி, இவ்விடத்துள்ளா ளெனக் கூறுதற்கியலாதுளேம். ஆதலால் இவன் திருமுகத் தெதிர்ப்படு முன்னமே இறந்துபடுவேம்" என்னுங் கருத் தால் எரிபுகுவனபோலச் செந்நிறம் படர்ந்த தாமரைகளிற் புக்கொளித்தன. அவ்வாறு அன்னங்கள் விரைந்து செலல் கண்டஞ்சிய மீன்களோவெனில், அருமருந்தனைய வுயிரிற் சிறந்த உத்தமக்கற்பினளைப் பிரிந்து, அதனால் களிப்பென்ப தின்னதென அறமறந்த இவ்வேந்தல் நம்மைக் காணுமாயின், "இவைகள் திருவிற் சிறந்த நம் சீதை விழிகளின் கேளென" உன்னி இதுகாறும் துளிப்பட்டறியாத நயனங்கள் நீர் சொரியக் கலங்கிச்சோரும். ஆதலால் அத்தகைய கொடுந் துன்பம் அவனடைதற்கேதுவாய் நாமிருத்தல் வேண்டா வெனக்கருதி யொளிப்பனபோல ஓடியொளித்தன. சில அன்னங்களோ, நமக்கு நடைபயிற்றிக் கொடுத்த சீதையை திசையெட்டும் வென்ற திறலுடைய இராவணனது சிறையி னின்றும் மீட்டுக் கொணர்ந்து இவன்பால் அளித்தற்குரிய ஆற்றல் பெறுதேமாயினேம் எனினும் அவ்வேந்தெழிலர் ளின் இன்னடை யொன்றும் காட்டலுறும் ஆற்றலுளேம். அது கொண்டாவது நம்மாலியலுதவி செய்வோம். எனக்

கருதினபோல் சானகியின் திருநடை காட்டுவனவாயின. இன்னடைகொண்டு தம்மாலியலுதவி செய்கின்ற அன்னங்களைக் கண்டுளந் தெளிந்தனபோலக் குவளைநாண்மலர்கள், அருளொடுகூடிய நோக்கமைந்த கண்களைக் காட்டுவனவாயின. *

நிகழ்ந்தவை கண்டு சீதையை நினைத்து இரங்கல்.

அன்னதாகிய பொய்கைக்கரையை இளவலோடும்சென்றடைந்தான் இராமன். அடைந்தவன் சீதையின் நடைகாட்டும் கன்னியன்னமும், முகங்காட்டும் கமலமும், விழி காட்டும் குவளையும், தீங்கனிவாய் காட்டும் குமுதமும் கண்டான். அவைதம்மைக் கூர்ந்து நோக்கி மகிழ்ந்தான். பின்னர் தன்னின் நீங்கிய தளிரியலுடைய சீதையை நினைந்துருகி, நல்லுணர்வொடுங்கிடப் புலம்புவானாயினன். அங்ஙனம் புலம்புகின்றவன் தன்னெதிர்தோன்றும் பொய்கையை நோக்கி, "புண்பட்டு வேகின்றதாகிய எனதுநெஞ்சிற்குத் தகுந்தவேது கொடுத்தற்குரிய மருந்தேபோல், அழகிய நறுமணமுள்ள தாமரை மலரையும், பணைப்பொருந்திய அன்றலர்ந்த குவளை மலரையும் தந்துதவும் அருமைமிக்க பொய்கையே! அவ்விரு திறப்பட்ட மலர்களால், யான்பிரிந்துள்ள என் இன்னுயிர்த்துணையான அச்சானகியின் திருமுகத்தையும், எழிற் கண்களையும் காட்டாநின்றாய்! ஆதலால் அவளது வடிவத்தைக்காட்டுதலும் உன்னாற்கூடும். அதனால் யான் நின்னையிரக்கின்றேன். இல்லையென மறாது அவள் தன் சீரார் திருவுருவையொருக்கால் காட்டாயோ!" என்பான். பின்னர்ச்

---

* இஃது செய்யுள் வழக்கேனும் நயம்பற்றி யுலகவழக்கேபோல் கூறப்பட்டது. இவையொத்த பிறவும் இவ்விலக்கணத்தன.

சிறிதே பொழுதத்து அவள் திருவுருவைக் காணப்பெறுமை யால் அப்பொய்கையை நோக்கி மீண்டும், "பொய்கையே! இசையா வொருபொருள் இல்லென்றல் யார்க்கும் வசை யன்று. அது வையத்தியற்கை. தம்மாற் கொடுத்தற்கியலும் ஒரு பொருளைக்கரந்துவைத்து இல்லென்றலே ஒருவர்க்கு வசையாகும். அதனை நீயறிதியன்றே? திருமுகமும், விழிகளும், தீங்கனிவாயும் காட்டிய நின்னால் அவள் வடிவைக்காட்டுதற் கியலாதா? நின்னாலது செய்தற்கியலுமென்றே நின்னையானி ரக்கின்றேன். அவ்வாறாகவும் ஒரு சில வுறுப்புக்களைமட்டு மே காட்டி உருவினைக்காட்ட மறுப்பதும் பொருந்துமோ? நீ யிவ்வாறு செய்வதும் நின்னுடைய உலோப குணத்தாலே யோ? அங்ஙனமாயின் உலோபஞ்செய் துயர்ந்தாரைக் கண் டாகிலும் கேட்டாகிலுமிருக்கின்றாயோ? உலோப குணத் தின் கொடுமையை நீயறியாய்போலும்! யான் கூறுவதைச் சற்றே கேள். அளப்பரும் நற்குணங்களை யெல்லாம் ஒரு சோ அழித்துத் தன்னையுடையானுக்கு இம்மையில் துன்ப மும், மறுமையில் நிரயமும் கொடுத்துக்கெடுப்பது உலோப மன்றோ? அத்தகைய கொடிய குணத்தையோ யாவராலும் விரும்பப்படும் நீ மேற்கொண்டனை? படிவாரது பாவங்களைப் போக்கி, அவர்கட்குப் புண்ணியப்பலனையளிக்கின்றனை யென நின்னையுலகினர் உயர்த்திக்கூறுகின்றனர். அதனால் நின்னி டத்து உலோபமாகிய கொடுங்குணமிருக்குமென வொரு காலும் யான் நம்புகிலேன். கிட்டுதற்கரிய புண்ணியப்பலனைப் பாவத்திற் கீடாகக்கொடுக்கும் உதாரகுணமுள்ள நினக்கு மனம்வருந்தி யிரக்கின்றவென்னொடும் வந்த சீற்றமென்னை யோ? இவ்வாறுயான் மனங்கலங்குமாறு செய்வதுதான்நினக் கழகிதோ?" வென்பான்.

பின்னர், அங்குள்ள களிமயில்களிற் சில, கார்மேகம் போன்றவனாகிய இராமனைக்கண்டு தத்தம் தோகைகளை விரித் தாடின. அவற்றைக்கண்ணுற்றான் இரகுவீரன். அவைகளை நோக்கி, "அந்தோ! தோகையீர்! குற்றமற்றனவும், ஒளிமிக் கனவும், உறங்காதனவுமாகிய கண்கள் ஓராயிரமுடையீர்! நீவிர் சிந்தையுவந் தாடா நிற்கின்றீர். ஆதலால் என்னுயி ரனைய சீதையைத் தெரியக்கண்டீர்போலும், நகையமூங்க நின்றோடிப் பொய்ப்பாசொப்ப, தோற்றத்தாலெழிலாரும் இப்பொய்கையானது கண்ணும் முகமுமெனக்குக்காட்டி, யான் எவ்வளவோ வேண்டியும், வடிவும் ஒருகால் காட்டா தொழிந்தது. அதுவேபோல் நீவிரும் செய்குவிரெனக் கருது வேனல்லன். ஆதலின் என்னின்னுயிர் உறைவிட மிதுவென எனக்கு அறியச்சொல்லீரோ?" வென்றுகூறி, அவற்றின் பின் செல்வான். அதுகண்டு அவ்வணிமயில்கள் சற்றே யகன்று சென்று அவனைநோக்கி யாடிநிற்க, அதனால் மனமுளைந்து அவற்றை நோக்கி, பின்னர், "ஆ! நீவிர்கொண்டுள்ள கருத்து இதுவென இப்பொழுது அறிந்தேன். நீவிர் இத்தகைய வன்னெஞ்சினராதல் அறியாதேனாய் நும்மை யடுத்து வினாவியதற்கு யான் பெரிதும் வருந்துகின்றேன். என்னருமைத் தேவியான சீதையின் அழகிய சாயலுக்கு நெஞ்சழிந்து பன்முறையும் ஓடா நின்றீர். அப்பகையை முடித்துக்கொள்ளும்பொருட்டு, அவளைப்பிரிந்து வருந்து மென் முன்னர், அவளுறைவிட மிதுவெனவறிந்துவைத்தும், அதனையெனக்குக்கூறுதிராய்க்களிக்கின்றீர்போலும்! நன்று நன்று நீவிர்கொண்ட மதியின் மாட்சி! பிழையாதாரிடத் துப் பிழைசெய்ய முற்பட்ட நீவிர் பேதைமையுடையீர் ஆவ

தன்றிப் பெருமையுடையீராதலுங்கூடுமோ? இச்செயலால் நீவிர், கொண்டபகை முடிக்கப் பெற்றவராய் உள்ளந்தான் குளிர்கிரோ? வென்பான்.

## இராமன் தன் செய்கடன் முடித்தல்.

என்பன பலவும்பன்னி யின்னுயிர்ச்சீதைதன்பால், அன்புறு சிந்தையாலிரங்கிய இராமன், பொழுது கழிந்ததையும், மாலைக்கடன் செய்யவேண்டிய காலமணுகியதையும் மறந்து நின்றான். அப்பொழுது அருகிலிருந்த இலக்குவன் இராமனைப்பார்த்து "நெடியோய்! பொழுதுகழிந்தது. மாலைக்கடன் செய்யவேண்டிய காலமணுகியது. ஆதலாலிப்பொய்கையில் நீராடி, நின்னிசையென நீண்ட அக்நாராயணன் திருவடித் தாமரைகளைத் தொழவேண்டாவோ?" என வதனைக்கேட் டுணர்வுற்று, மலையொத்த தோற்றத்தையுடைய மதவாரணம் நாணும்படி பொய்கையிலிறங்கி நீராடினான். செய்யக் கடவ கடன்களைச்செய்து முடித்தான். பின்னர் அருகி லிருந்த ஒரு சோலையிற்சென்று, முனிவராச்சிரமத்துவைகி அன்றிராப்பொழுதைக்கழித்து, மறுநாள் உதயகாலத்தே யெழுந்து கடன் முடித்துக்கொண்டு, சுக்கிரீவனைக் காண்ப தற்காக, ரிஷியமுக பர்வதத்தின்மேல் யாதொரு சிரமமு மின்றி இளவலோடுஞ்செல்லுவானாயினன்.

---

# இரண்டாவது அத்தியாயம்.

## சுக்கிரீவன் மனக்கலக்கம்.

அவ்வாறு செல்லுகையில் இவ்விடத்துச் சீதையாவது சீதை சென்றிருக்குமிடத்திற்குரிய நெறியைக்காட்டும் அறிகுறியாவது, அடைதல் கூடுமென்னுங் கருத்தினால் நீண்டு

விசாலித்த கண்களை யிருமருங்கினும் போக்கித்திருவிச்செல்லுவானுயினன். நிற்க. அம்மலையின்மீது சிலர் குழுமியிருந்தனர். அவர்களில் முக்கியமானவர் சுக்கிரீவன், அநுமான், தாரன், நீலன் முதலியோராவர். அவர்களுடன் வேறு சிலருங்கூடியிருந்து, குதூகலத்தொடும் உரையாடிக்கொண்டிருக்கும் அமைதியில், அவர்கள் தலைவனுகிய சுக்கிரீவனது நாட்டம் தற்செயலாக அம்மலைச்சாரின் காட்சியிற்சென்றது. சென்ற நாட்டம் அம்மலையில் ஓங்கிவளர்ந்த மரங்களின் உயர்நிலைத் தோற்றங்களையும், மற்றும் அங்குக்காணும் வேறுவகைத்தோற்றங்களையுங் கண்டின்புற்றது. அவ்வளவையில் அஃது அம்மலைமீதேறி வருவோராகிய இராம இலக்குமணர்கள் மீதுஞ்சென்றது. சென்றதுதான் தாமதம்! உடனேயவன் முகம் மாறுதலடைந்தது. அது, அருகிலிருந்தோர் யாவரும் அவனுள்ளத்துத்தோன்றிய கலக்கமூர்துயரும் இவ்வளவெனவுணரும் வண்ணம் காட்ட வல்லதான ஓர் அளவுகோல் போல்வதாயிற்று. ஆ! என்னே! என்னே! நாம் இவ்வுலகில் வாழும் நாளில் பெறுகின்ற இன்பத்தின் நிலைதான்! காட்சியின்பம் பெற்றுவக்கின்றவனுகிய அச்சுக்கிரீவனுக்கு, அக்காட்சிதானே பெரிய மனக்கலக்கத்தைத் தருவதாயிற்றே விந்தையினும் விந்தை! அம்மம்ம! இவ்வாழ்க்கையில் பெற்றுவக்கின்ற இன்பங்களெல்லாம் துன்பத்திற்கே ஏதுவாயுள்ளனபோலும். நிற்க. மனக்கலக்கமுற்ற சுக்கிரீவனது நிலையை அநுமான் முதலியோர் கண்ணுற்ருர்களில்லை. அதற்குக்காரணம் அச்சுக்கிரீவன் அவர்களைவிட்டுச் சற்று விலகியிருந்தமை யொன்றுமேயாகும். அவ்வாறு கலக்கமுற்றவன் தன்னெதிர்தோன்றும் இராம இலக்குமணர்களது

உருவையுற்று நோக்குவானுயினன். நோக்கியும் என்ன? அவனுக்கு அவர்கள் தோற்றம் கலக்கத்தையதிகப் படுத்தியதே யல்லாமல் குறைத்தபாடில்லை. மிகக் கலங்கி நின்றவனாகிய சுக்கிரீவன், "ஆ தெய்வமே! இன்னும் என்னிடத்து நீ யுளமிரங்கினுயல்லை போலும். நின்னுளமிரங்குதற்கில்லையாம்வண்ணம் யான் செய்துள்ள கொடுமைதான் யாதோ அறிகிலேன். வினையின் நீங்கி விளங்கிய வறிவின் முனைவனாகிய நின்னையன்றி வேறியாவர் குற்றத்தினீங்கியோராவர்! என்னல் அறிந்தும் அறியாதும் தீங்கிழைக்கப் பெற்றவர்கள் யாவரேனு முளரோ? பெருங்கருணைத்தடங்கடலாகிய வள்ளலே! ஒயாதிடும்பைகொண்டு உய்யும்வழிவிட்டிடுமிதற்கு யாது காரணமென்பதனை யறியமாட்டாதவனுயிருக்கின்றேன்.உண்மையிற் குற்றம்என்னிடத்திருக்குமேல் அஞ்சனை சிறுவன் முதலியோர் என்னையடுத்து மனமொன்றித்துயருற்ற வாழ்வினை மேற்கொள்ள இசைவரோ? என் முன்னவன்,தனக்குயான் பெருந்தீங்கிழைத்ததாக வெண்ணி யென்னுயிரைக்கூட்டுணவேண்டுமெனச்சீற்றங்கொண்டவன், இன்னுமது தணிந்தானில்லைபோலும்! அவ்வாறு அவன் சீற்றங்கொள்ளுதற்கேற்ப, யானவனுக்கிழைத்த தீங்குதான் யாதோ? அரக்கனாகிய மாயாவி வஞ்சனையால் நம் முன்னவனைக் கொன்றனன் போலுமெனக் கருதி, அவ்வரக்கனை யஞ்சி,அப்பிலத்தின் வாயில மலைகற்கொண்டடைத்து வந்தேன். அஃது என் முன்னவனுக்குத் தீங்கு செய்யும் கருத்தினாலன்றே! பின்பு, அஞ்சனை சிறுவன் முதலிய அறிவினரும், குடிகளும் பல்வேறு நியாயங்களைக்காட்டி வேண்டிக்கொண்டமையால், அவர் பொருட்டாக யான் அரசு மேற்கொள்ளுதற் கிசைந்தேன். அதுவும் என் குற்ற

மன்றே! என் முன்னோன் வரவும் உடனேயவன் பாதங்களில் வீழ்ந்திறைஞ்சி எனதுபிழை பொறுக்குமாறு வேண்டி அவன் அரசியலையுமவன்பால் ஒப்புவித்ததல்லாமல், அவனோடும் வாதிட்டேனே? இல்லையே! அங்ஙனமாகவும் என்னிடங் குற்றமே கண்டு, என்னை யொறுக்குமாறு உளங்கொண்டு இன்னுஞ் சீற்றந் தணியாதிருக்கு மவன் செயலேபோலும் நினக்கு அறச்செயலாயிற்று?'' என்று தனக்குள் தானே கூறிக்கலங்கிப் பின்னும் மலையேறிவரும் அவ்விருவரையும் வைத்த கண் வாங்காமற் கூர்ந்து நோக்குவானாயினான்.

சுக்கிரீவன் அநுமனை வேண்டுதல்.

அவனவர்களை நோக்குவதனால் பின்னும் அதிகமான பயத்தையே பலனாகப்பெற்றான். எவ்வளவு முயன்றும் தன் கலக்கத்தைப் போக்குதற்கியலாதவனாய், தனக்கு நலம் புரிந்து வரும் அநுமனை விளித்து, "நீதியை விரும்புபவனே! நம்தம் தீவினை யின்னும் நம்மைவிட்டொழிந்ததாக வில்லை. அதோ பார்: இரண்டு மாகதக்குன்றமனையர் இம்மலை மீதேறிவருவதனை. குன்றனைய பாழிப்புயமும், பரந்த மார்பும், கட்டமைந்த வில்லேந்திய கையுமுடையராய் நம்முறை விடமே நோக்கி வருகின்றனர். அவர்களை யிதற்கு முன்பு நாம் ஒருபொழுதும் கண்டறியோம். அத்தகு உயர் நிலை வீரர் இம்மலையின் மீதேறி நம்மிடத்தைக் குறிக்கொண்டு வருவதனை நோக்குமிடத்து வேட்டைமேற் போந்தவராகத் தோன்றவில்லை. என்னிடத்துத் தீராக்கோபமுடைய என் முன்னவன் ஏவ அதனாலெனக்கும், என்னைப் பின்பற்றிய நுமக்கும் தீங்கிழைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வருபவராமெனக் கருதுகின்றேன். இவ்விடத்தில் எந்நாளும்

நமக்குத் தீங்கு நேரிடாதெனக்கருதி யொருவாறு மனந் தேறியிருந்தேன். அஃதும் வீணாகப் போவதாயிற்று. அந்தோ! இதற்கு யாது செய்குவேன். வருகின்ற அவ் வீரரது உள்ளக்கருத்திதுவென உள்ளவாறறிதற் கியலா தவனாயிருக்கின்றேனே. ஏ! வாயுகுமார! நீயே யெனக்கு இந் நிலைமையில் தகுந்த வுதவிபுரிதல்வேண்டும். நீயோ எல்லாக்கலைகளையும் கற்றுணர்ந்தவன். அதனால், வருகின்ற அவ்விருவர் செயல்கொண்டுஅவர் நிலைமையறிந்து எனக்குத் தெரிவிப்பாய்'' என்றுளத்தடுமாற்றத்தோடும் புகன்றான். அவ்விருவரும் தன்னொடு நட்புக்கொள்ளுதற்கு வருகின்றா ரென்பதை யுணராதவனாய், அறமே யுருவெடுத்தாற்போலு மவர்களைத் தன்னைக்கொல்லவரும் கூற்றெனக் கருதினான். பின்னர்ச் செய்வதறியாது மயங்கி நெஞ்சழிந்து, அம் மலைக்கண் ணுள்ளதொரு குகையை நோக்கி விரைந்தோடுவா னாயினன்.

அவ்வாறு தங்கள் தலைவன் உளமஞ்சிக் குகையை நோக்கி விரைந்தோடுதலை யருகிலிருந்தோர் கண்டனர். அவர் அவனினும் மிக்கவச்சமுற்றுச் செய்வது இன்னதென ஓர்கிலராய் அவனைப் பின்பற்றிக் குகையைநோக்கி யோடுவா ராயினர். மாருதியும் அவரொடுசென்று,ஆலகால விடங்கண்டு மறுகியோடிய தேவர்கட்கு அபயமளித்துதவிய அரனே போல், அவர்களைநோக்கிக் கையமர்த்தி, ''நீவிர்வீணே கவலைக்கிடங்கொடுத்துத் தவிக்கவேண்டிய தொருநிமித்த மில்லை. வருகின்ற அவ்வீரரதுள்ளக் கருத்தறிந்து யான் வருமளவும் நீவிரிவ்விடத்தே கவலையுறாது மனவமைதி யொடும் இருப்பீர்களாக'' எனத் தேற்றினான். பின்னர்த்

தானவ்விடம்விட்டு இராமலிலக்குமனர்கள் வருகின்ற நெறி யெதிர் செல்வோன், அவர்கட்கெதிர்ப்பட்டு நேரே செல் லாது, ஒருமாத்தின்புறமாக வொருபிரமசாரியின் வடிவின ளுய் மறைபநின்ருன். நின்று அவர்களது நிலைமையைத் தனது பேரறிவினுல் ஆராய்ந்தளந்தறியலாயினுன்.

---

## மூன்ருவது அத்தியாயம்.

### அநுமன் ஆராய்ச்சி.

அறியலுறுகின்றவன், “இவர் தமது திருமுகத்தொளி யும், தோற்றப்பொலிவும், ஏறுபோற்பீடுநடையும் நோக்கின் இவரைத்தேவரின்மிக்கமூவராமெனக்கோடலமையும் எனினு மிவர் இருவரேயுளர். அதுபற்றி யவ்வாறு கொள்ளுதற்கிய லாது.இருவருள் ஒருவன் நீலமணிபோலும் வண்ணமுடைய வனும், மற்றவன் பொன்போலு மழகியவண்ணமுடையவ னுயுமிருக்கின்றமையால், விரிஞ்சனெழித்து மூவரிலிருவரா கிய திருமாலும், சிவனுமே யாவர் இவரிருவரும், எனலா மெனிலோ? வலமிடமுறக்கொண்ட திகிரிசங்கமும், சூல கபாலமுமிலராய் வில்லேந்திய காத்தினராயுளர்.இவர் வீரருக் கமைந்த கொலைத்தொழிற்கு உறும் கொடுஞ்சிலையேந்திய காத்தினரெனினும்,மாவுரிதாங்கிய மெய்யும், சடைமுடி தாங் கியசென்னியுமுடைய தவவேடத்தினராய்க் காண்கின்றனர். தவவேடத்தை மேற்கொண்டார் வெஞ்சிலை யேந்துபவராத லியல்பன்றே! இவர் தமது செய்தொழிற்கும் கொண்ட வேடத்திற்கும் ஒவ்வாத நிலைமையை மேற்கொள்ளுதற்கண் அத்துணை யெளியரோவல்லர்.அவ்வாறு கருதுவதற்கு எள்ள ளவினும் இடனில்லையே.அருள்பழுத்தளிந்த திருவுள்ளத்

றியல்பை அவர்கண்கள் நாமறியவெடுத்துக் காட்டுகின்றன. அக்கண்களினின்றும் வெளிப்படும் ஒளிபொருந்திய நோக்கந்தானும், "வருகின்ற இவரே கருணையங்கடலாவர். இவரையன்றியுலகத்துயிர்கட்குஉற்றதுணையாவார்வேறொருவரில்லை. இம்மை மறுமையொடு மும்மைப்பயனும் தாவல்ல அறத்தின் நிலையமேயாவாரிவர்கள். உலகஞ்செய்த தவப்பயனுண்டாதலால், நீவிரெல்லாம், நேரிற்கண்டு நற்கதிபெற்றுய்யும் வண்ணம் இத்துணை எளிவந்துள்ளா"ரெனத் தெரிவிப்பது போல் இருக்கின்றது. இவர் தேவரிற்சிறந்தவராக வைத்துப்போற்றத்தக்க நிலையுடையாராவர். பிறவுயிர்கட்கு நன்மையே நாடும் நலஞ்சிறந்தோராதலன்றி, அவை தமக்குக் கனவிலுந் தீங்கிழைக்கு மியல்பினரல்லர். அமரர்கோமகனும் இவர் தமது தவவொழுக்கத்தின் மேம்பட்ட நிலை கண்டஞ்சியுளமொடுங்குவான். நாளற்றதெண்ணி உயிர் கவருந் தென்றிசைக்கோனும்கண்டு வியக்கத்தக்க நடுநிலைமையினர். இவ்வேந்தலாரிடத்து அமைந்த பேரெழில் நமக்கில்லையாயிற்றே யென மதனனும் கவலுங்கட்டழகினர். இத்தகு பெருந்தகையாளரையோ நம்மைத்துன்புறுத்தவரும் வாலியினேவலாளரெனக் கருதுவ"தென எண்ணமிட்டு, அவ்வாறு கருதினமைக்குப் பெரிதும்மனக்கவன்று பின்னாவாது செயல்களையாராய்வானுயினன்.

ஆராய்பவன், "இவர்கள் இதுபொழுதுசிறிதளவில்மனத்துயரடைந்தவராகக் காணப்படுகின்றனர். எனினும் உற்றிடும் வினைகட் கெல்லாம் உளங்கவலும் பெற்றியினரோ அல்லர் இருபுறமும் செடிது நோக்கி நிதானித்து வருகின்ற இவரைக்கண்ணுறுவான் யாவனேயாயினும், அவன், 'இவர்கள் சிந்தனைக்குரியதோ ரரும்பொருளைத்தேடி வருவோரேயாவர்'

என எளிதினுணர்ந்துகொள்வான். இவர்தாம் கருத்தொடு தேடிவரும் பொருளும் பிறிதொன்றன்று, அருமருந்தனைய தாதல்வேண்டும். இவ்விடத்தே யிவர்களால் அஃது தேடப் படுகின்றமையின் இடையி லடுத்ததோ ரழிவினாலப்பொருள் தவறுபட்டிருத்தல் வேண்டும். அதனாலப்பொருளைத்தேடி வருகின்றன''ரெனத் தேர்ந்துகொண்டிருந்தான்.

அத்தருணத்து மயில் முதற் பறவையெல்லாம், அழகமைந்த இவர்களது திருமேனியினருமை யறியாதவனாய்த் தன்வெஞ்சுடர்க்கிரணங்களை வீசிச்செல்வான் அமைந்தனனே வெய்யவனும், எனக்கருதினபோல்,சிறகுகளை விரித்து, சுற்றி நின்றவை மதிலும், மேல் நின்றவை பந்தருமமைத்துப் பின் தொடர்ந்தன.இரவியின் வெஞ்சுடர்க்கிரணங்களால் காயெரி கனலுங் கற்கள், அவ்விருவரது தூயதன்மை மிக்க செந்தாமரைமலரன்ன பாதங்கள் தோய்தொறும்,'அந்தோ! அழகிய அத்திருவடிகளை யாமோ நின்று துயருக்காளாக்குவது? நமக்குக்கொடு வினையிரா நின்றது!'' என்று அகங்குழைந்தனபோல வன்மைக்குணமிலவாகிக் கள்ளுடைய மலர்களேபோல் குழைந்து தோன்றின.

அநுமான் அவற்றைக்கண்டு வியந்து மெய்ம்மறந்து, "துன்பங்களையெல்லாம்ஒருங்கேயில்லையாம்வண்ணம்போக்கி, நிரதிசயவின்ப வாழ்வினை யருளும் தேவர் தாமோ இவர்கள். என்னை யறியாமலேயும் என்னெனன்பெல்லாம் நெக்குருகுமாறு போன்பெனது உளத்தெழுந்து ஓங்குகின்றது. இதற்குக்காரணம் யாதோ அறியமாட்டாதவனாய் இருக்கிறேன்'' என்றிவ்வாறு பல வெண்ணங்கள் கொண்டிருந்தான். ஒன்றினாலு மொருமுடிபிற்கு வரமாட்டாத

வனுய்த் தியங்கினுன். அந்நிலையில் இராமரும் இலக்குமண மாருதியிருக்குமிடத்தை யண்மினர்.

## அநுமன் இராம இலக்குமணரைச் சந்தித்தது.

அவ்வெல்லையில் அநுமன் இனி யிவ்விடத்து மறைந் திருத்தல் தகுவதன்றெனக்கருதி, அவர் தமக்கு எதிர்சென் றெய்தி, "ஐயன்மீர்! நும்வரவு குற்றமற்றதொன்ருகுக" வென இன்மொழி கூறினன். அதுகேட்ட இராகவனும், அங்ஙன மேயாகுக. அய்யனே! நீயாவன்! எவ்விடத்துநின் றும் ஈங் குப் போந்தனை? எந்தமக்கறியச்சொல்லுதி! என்றுமொழிந் தான். குலமலைகளுந்தாழும்படி நல்ல புகழைச்சுமந்தெழுந்த தோள்களையுடைய மாருதி, அதற்கு விடையாக:—

"மஞ்செனத்திரண்டகோல மேனியாய்மகளிர்க்கெல்லாம்
நஞ்செனுந்தகையவாகி நளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்ய கண்ணயான்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றின்வந்தேன் நாமமுமநுமனென்பேன்
இம்மலையிருந்துவாழும் எரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன் தேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையான்ஏவ வினவியவந்தேன்" என்ருன்.

இனிமையாகவும், தெளிவாகவும், சுருக்கமாகவும் தனது வரலாற்றையும், அங்குவரநேர்ந்த காரணத்தையும் அநுமனெடுத்துப் புகன்ருன். அவற்றைச் செவியேற்ற இராமன் தனது போதியினுல், சொல்வன்மையும், நிறைந்த பேரொழுக்கமும், கசடறக்கற்ற கல்வியும், நுணங்கிய கேள் வியும், மதிநுட்பமும் உடையான் இவனெருவனுமேயாகும். ஆதலின் இவனிற்சிறந்த சீரியோ ரிவ்வுலகத்திலெவருமே யிலர் எனத்தேறினுன். பின்பு இலக்குவனை நோக்கி,

"இளையவீர! இவனுற் கற்கப்படாத நூலொன்றிருப்பதாக எவ்வாற்ருனுங் கொள்ளுதற்கில்லை. மதிநுட்பம் நூலோடுடையவிவன், தனக்குச் செல்வமாகச் சொல்லையேயுடையான். இவனதுயர்ந்த பேறிவின்மாண்பு இவ்வளவினதென இவன் சொல்லே விளக்காநின்றது காணுய்! இத்தகைய மாசறு காட்சியும், இழுக்கிலா இன்சொல்லுமுடைய இவன் மலரவனேயோ? அன்றி வேதாகமங்களையருளிய பசுபதியேயோ? அறிதல்தேற்றேன்! இவன் வடிவத்தால் மாணவனுகத் தோன்றினும், உலகம் என்னும் ஒரு பெருந் தேருக்கு அச்சாணி போல்பவனென்னலாம் தகுதியினன். ஐயந்திரிபின்றி யிவனதுபோாற்றலினளவை யான் உள்ளபடியறிந்துகொண்டேன். அதன் உண்மையை நீயும் பின்னர்க் காண்பாய்'' என்று கூறி, பின் அநுமனை நோக்கி, இவ்வழியெம்மை யெதிர்ப்பட்ட இனியோய்! நின் இன்சொல்லையொத்த அறத்தையே விரும்பும் உள்ளத்தவனுகிய அவ்வுத்தமன் எவ்விடத்துளன்? அவனைக் காணவேண்டுமென்னும் விருப்பமுடையேமாய் அவனுறைவிட மிதுவென வறிந்து ஈண்டுப்போந்தேம், ஆதலால் அவனை யெமக்குத் தெரியக் காட்டுதியோ? வென்முன்.

அநுமன் அவர்வரலாற்றை வினவியது.

அதுகேட்ட மாருதி, "உலகுய்யத்தோன்றிய உத்தமராகிய நும்மையொத்த புனிதர் வேறு யாவருளர்? நீவிர் ஆதரித்து அவனைக்காணும் அருத்தியினராய் ஈண்டுப்போந்தீரேயாமாயின், அன்னுன் நீடூழியச்செய்ததவம், நீதின்றி வந்தபொருளேபோல்பெரும்பயனளிப்பதாயிற்று. இந்திரன் புதல்வனுகிய வாலி இரவியின் புதல்வனுகிய அவனைச்சீற, அவன் சீற்றத்திற்கஞ்சிப்போந்து இம்மலையின்மீது தன்பத்

திற்குத் தாமொருவனேயாகி என்றெடும் வாழ்வதா யிருக்கின்றனன். அவனை நாடி நீவிர்வந்தமையால் அவனுக்கு நல்வினைப் பயனுண்டாகுங்காலம் பொருந்துவதாயிற்றென லாம். சூர்னையஞ்சித் தஞ்சம்புகுந்த அமரரையும், அமரர் கோமானையும், அபயமளித்தாண்ட முருகனை யொத்த நும்மைச் சரண்புகுந்தேம் யாம். எம்மையும் எங்குலத் தலைவனையும் காத்தருள்புரிவீராக. தேவரே முதலாவுள்ள வுயிர்களமைந்த மூத்திறப்பட்ட வுலகங்கள் யாவையும், ஒருசேரக் காத்தளிக்கும் நும்மையடுத்து, எம்மைக்காத் தருள்புரிவீர் என்று வேண்டுதலும்வழைமைப்பாலதன்றோ? வாண்மைமிக்க வுத்தமராகிய நும்மைக்குறித்து எம்தலைவ னுக்கு உணர்த்துகையில் யாரென விளம்புகேனோ?'' என்று விநயமாகக்கேட்டனன்.

## இலக்குவன் தம்வரலாறு கூறுதல்.

அதுகேட்ட இராகவன், "நமது வரலாற்றை யறியச் சொல்வாயாக'' எனத் தன் இளவலுக்குப் பணித்தனன். அப்பணியைச் சிரமேற்கொண்ட இளையோன் அநுமனை நோக்கி, ''இரவி குலோத்தமனாகிய தயரதச் சக்கரவர்த் தியின் மூத்தகுமாரனும், தனது சிற்றன்னை யேவத் தனக்கு உரியதாகிய அரசுரிமையைத் தனது மற்றொரு தம்பியாகிய பரதனுக்குதவிக் கானகம் போந்தவனுமாவான் இராமனென் னுந் திருநாமமுடைய இவ்வண்ணல். இவ்வண்ணலுக் கேவல் செய்யும் அடியேனாவேன்யான். என்னை இலக்குவனென்னும் பெயரிட்டு அழைப்பர்.'' என்று கூறுவானாகி இராவணன் இழைத்த மாயப்புன்றொழில் விறுதியாக நிகழ்ந்தவை யெல் லாம் ஒன்றுந்தவறாதாகத் தெரியச்சொன்னான்.

## அநுமன் தன் மெய்யுருக்காட்டுதல்.

இலக்குவன் மொழிந்தவற்றையெல்லாம் ஒன்றும்விடாமற்கேட்டு நின்றான் மாருதி. 'வாலியேவலின் வாலினார்கள் தாம் வரிசிலையர்' எனக்கவன்ற சுக்கிரீவனுக்கு நன்மையாங் காலங்கிட்டியதற்காக மனமுவந்தான். பின்னர், ஆனந்த பாவசனாகி இராமலிலக்குமணர்களது செந்தாமரை யன்ன திருவடியிணைகளில் நெடிது வீழ்ந்து பணிந்து இறைஞ்சினான். அதனைக்கண்ட இராமன் இரண்டடி பின்வாங்கி, அநுமனைநோக்கி, 'ஓதியுணரு மொருபெரும் நூலாகிய மறைவல்ல வேதிய! நீயோ இச்செயல்புரிய நின்றனை. நன்று நன்று! அந்தணர் குலத்துதித்து அருநெறியாகிய பிரமசரியத்தை மேற்கொண்டொழுகும் அருமையுடைய நீயோ அரசர்குலத்துதித்த எம்மைப்பணிவது? இத்தகாதசெயலைப் புரிந்து அபசாரப்படுபவன் எல்லாம்கற்றுணர்ந்து நிறையொடு நிற்கும் நெறியினனாகிய நீயேயோ? சால அழகிது! அறநூலுணர்ந்த ஐயனே! நீ இத்தகாத செயல்புரிய நின்றதென்னையோ?' என்று பரிந்து வினவினன். அதற்கு விடையாக மாருதி, 'அருள்பொழியும் விழியமுதத்தண்ணலே! அடியனேன் பிழைபொறுத்தருள்க. நும்போல்வாரிடத்து அறனில்லாச் சிறுவினையோ அடியனேன் செய்யத்துணிவன்? ஒளியா துண்மைகூறுவனேயாயின், அடியனேனொரு மாணவனல்லன். நீவிர் காணவிரும்புங் கவிக்குலத்தரசனுக்கு யான் ஒரு மாணவனேயாயின் என்னொத்தவர்தாமோ ஏவல் செய்குவர்? உண்மையைவெளியிடாது இதகாறுமுரையாடிவந்த எனதொரு பிழைபொறுத்தருளல்வேண்டும். அடி

யேனும் அரிக்குலத்தொருவனுவேன்' எனக்கூறித் தனது குரக்குருக்கொண்டுநின்ருன்.

## இராமன் அநுமனை வியத்தல்.

மெய்யுருவாகிய குரக்குருக்கொண்டு நின்ற அநுமனை, இராமன் தனது இருவிழிகளாலும் கூர்ந்து நோக்கினன். நோக்கியும், "கண்டிலன் உலக மூன்றும் காலினுற் கடந்து கொண்ட,புண்டரீ கக்கண் ணுழிப் புரவலன் பொலன்கொள் சோதிக், குண்டல வதனம் என்ருல்,பண்டைநூற் கபிரோன் சொல்லப் படித்தனன் படிவம், கூறலாம் தகைமைத் தொன் ருே?" அநுமனுடைய பேருருவைக் கண்டு வியந்துகொண் டிருக்குமிராமன் தன் மனத்தில் உவகைபொங்க இளவலை நோக்கி, "ஐய! பழைமைமிக்க வேதங்களாலும், குற்றமற்ற ஞானத்காலும், பற்றப்படாததாயுள்ள பரம்பொருளே யொரு குரக்குருக்கொண்டதுபோலும். முன்னர்க்கூறிய என்சொல்லிற்கு மெய்ப்பித்தது காணுய்? நாம் நன்னிமித் தமே பெற்றவராயினேம். ஒப்புயர்வற்ற உத்தம நம்பி யாகிய இவனை நமக் குறுதுணையாகப் பெற்றேம். இதற்கு மேலும் நமக்குத் துணையாக வேண்டுவது யாது கொல்? இனி நமக்குத் துன்பமென்பதில்லையாய் இன்பமெய்துவ தாயிற்று. ஏவல் செய்வாெருருவனது நிலைமை யித் தன்மைத்தென்ருல், இவனைத்த குரிசிலரை ஏவல்கொள் வான் நிலைமை நம்மாற் கூறற்பாற்ருே?" என மொழிவோ னுகி முகமலர்ந்து இனிதிருக்கையில், அநுமானவர்களை நோக்கி, 'எங்குலத்தலைவனை யிதுபொழுதே சென்றழைத்து வருகின்றேன். விழுமிய குணத்திர்! நீவிரிவ்விடத்தே சிறிது

பொறுத்திருப்பீராக!" என்று தெரிவித்து விடைபெற்று விரைவிற் சென்றனன்.

---

## நான்காவது அத்தியாயம்.

### அநுமன் சுக்கிரீவனை அழைக்கச்செல்லுதல்.

இஃதிவ்வாறாக, அச்சத்தால் உளமொடுங்கிச் செயலழிந்து மலைக்குகையிலொளிந்திருப்பவனாகிய சுக்கிரீவனோ 'நாம் அனுப்பிய வாயுகுமார னின்னும் வந்தானில்லையே! ஒருகால் நம்மைக் குறிக்கொண்டுவருகின்ற அவரையஞ்சித் தானு மோடியொளித்தனனோ? அவ்வாறு செய்பவனல்லனே! 'ஒல்லைவந் துறுவன உற்ற பெற்றியின், தொல்லைநல் வினையென உதவுஞ் சூழ்ச்சியார்' என அமைச்சரதுயர்வை ஆன்றோர் பாராட்டிக்கூறியதற்கிணங்க, என்னலமொன்றுமே தன்னலமாகக் கருதுபவனாகலின், இடர்ப்பட்டுத் தளர்வுறுமித்தருணத்திலோ நம்மைவிட்டு நீங்குவன்? நீங்குவானல்லன். அவர்களை யின்னாரென நன்கறியவெண்ணி, அதற்காகிய சூழ்ச்சியில் முயன்றுளான்போலும்.' என்று அவன் வாராமையால் கலக்கமும், காரணங்கருதித்தேறுதலுங் கொண்டிருந்தான்.

அவ்வாறிருக்கும் சுக்கிரீவன் முன்பாக,'யானுய்ந்தேன். நின்பெருங்குலம் உய்ந்தது. உலகுய்ந்தது' என உரக்கக் கூவிக்கொண்டு களிபேருவகையுடன் சென்று, 'அரசே!நீயே தவமிகச்செய்தனையாதி! நின்னைப்பற்றி நின்ற தீவினையாவும் ஒருசேர இன்றோடொழிந்தன. அளவிலா வலியினனாகிய வாலியின் உயிர்கவர்வான் ஒருகாலன் வந்தனன்.' என்று மொழிந்ததோ டமையாது,ஆலமுண்ட நீலகண்டனேபோல்

அங்குக் குழுமியிருந்தோர் நடுவண்நின்று திருநடம் புரிவதானன்.

['வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்'

'பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்'

என, வாய்மைபொய்மைகளின் இலக்கணம் வகுத்தார் தெய்வப்புலமைத்திருவள்ளுவனர். அதாவது, இவ்விரண்டு பாட்டாலும், தீங்குபயத்தலில்லாத நிகழ்ந்தவை கூறலும், நன்மைபயக்கும் நிகழாதவை கூறலும் வாய்மையெனவும், தீங்கு பயக்கும் நிகழ்ந்தவை கூறலும், நன்மை பயவாத நிகழாதவை கூறலும் பொய்ம்மையெனவும் போதரும். அவ்விலக்கணத்தின்படியாக நிகழாததேனும் நன்மைபயக்குமுறைமையுடையதென ஆராய்ந்த அநுமான், சுக்கிரீவன் இராமனை வவேற்று உபசரித்து நட்புக்கொள்ளுதற்கிசையும் வண்ணம், அவனது பெருமபயத்திற்குக் காரணமாய் நின்ற வாலிக்குக் காலன் வந்திருப்பதாகத் தெரிவித்தனன். ஈண்டு அநுமானது வினயமதியை நம்மனோர் கவனித்துக் கொள்ளல்வேண்டும்.]

அநுமான் மொழிந்தவற்றைக்கேட்ட சுக்கிரீவன் திகைத்து நின்றான். பின்னரொருவாறு மனந்தேறியவனுய் அநுமனைப்பார்த்து, 'அன்பனே! நீ மொழிவதுதான் யாது? என்னையோ பெருந்தவத்தைச் செய்தவனென்று மொழிகின்றனை! நன்று நன்று. யான் செய்துள்ள தவத்தின் பலனுக அவத்தைக்கொண்டு அழியா நிற்பதை நீயறியாயோ? யான் செய்திருக்கும் அத்தவத்தை வேறு யாருஞ் செய்யாதொழி

வார்களாக! மலை மீதேறி வருவோர் யாரென அறிந்துவரச் சொல்லியனுப்பிய என்னிடம், அவரைக்குறித்து யாதொன்றுங்கூறுது, என் முன்னவன் உயிர்கவர்வான் ஒரு காலன் வந்திருப்பதாகக் கூறினை! இஃதும் நினக்கொரு விளையாட்டோ? அன்பனே! நாம் ஒருவருக்கொருவர் விளையாட்டாக வுரையாடிக்கொள்ளும் காலமிதுவேயோ? நீ கூறியவற்றிலிருந்து யானென்றும் அறியமாட்டாதவனுயிருக்கின்றேன். வந்திருப்போர் இவரென எனக்கு நீ யறியச்சொல்லாயோ?' என்று கூறினன்.

## இராம இலக்குமணர் வரலாற்றைக் கூறல்.

கூறவே அநுமான் அவனைநோக்கி, 'ஐயனே! இதுகாறும் யான் நின்னுடு எப்பொழுதாகிலும், வீணுரையேனும், பொய்யுரையேனும் விளம்பியதுண்டோ? யான் மொழிந்தவற்றுள் ஒன்றேனும் பொய்படுவதாகுமோ? அதனை நீயே பின்னர்க்காண்பாய். கலங்காதே. வந்திருப்பவர் வரலாற்றைத் தெரிவிப்பேன். அதனைச் சற்றே கேட்டருள்வாயாக' என்று கூறுவானுயினன்.

கூறுகின்றவன், "வந்திருப்போர் மண்ணுெடு விண்ணும் தன்னுணைவழி நின்றெழுகும்வண்ணம் கிகிரியுருட்டிய தசரதச்சக்கரவர்த்தியின் புதல்வராவர். கோசிகமாமுனிவனருளிக்கொடுத்த வில்வித்தைப்பயிற்சியும், கடவுள்வெம்படையுமுடையர். அவருள் மூத்தவன் தன்னுெடு தொடர்ந்து வந்திருக்கும் இளவலுடன் அக்கோசிகமா முனிவனுடன்சென்று, அவனேவல் வழிநின்று, சிறு பிராயத்திலேயே கன்னிப்போர் விளையாடி, அதனுற்கூற்றுவனும் அரக்காது உயிர்ச்சுவை யித்தன்மைத்தென் றறியும்படியாகத் தாடகையென்

னுங் கொடியாளை முதலிற்கொன்றான். பின்னர் அம்முனி வனியற்றிய பெருவேள்வி காத்தான். அவ்வேள்விக்கிடையூறு செய்யவந்த மாரீச சுபாகுக்களை யேற்றவாறு தண்டித்தான். மிதிலைசெல்லும் நெறியில் கல்லுருவொடுங்கிடந்த அகலிகை யென்னும் மாதரசிக்குத் தன் பாதத்துகளினால் துகளில்லையாகவருளினான். மிதிலைசென்று கண்ணுதற்பெருங்கடவுள் கார்முகம் கண்ணுற்றுக்கையேந்தி நாணேற்றியிறும்படியாகச் செய்தான். அதனால் அமிழ்தின் வந்த தேவியாகிய ஜானகியைத் திருமணம் புரிந்து, அயோத்தி திரும்புகையில் எதிர்ப்பட்டு வாதிட்ட பரசுராமனைவென்று அவனது தவப்பலனைப்பலனாகப்பெற்று அயோத்தி யடைந்தான். பிறகு சிலநாட்கழித்து, தந்தை சொல்லால் அரசேற்க நின்றுழி, சிறியதாயேவத் தன்னரசுரிமையை அவள் மகனாகிய பரதனுக்கு அன்போடுதவி, தேவியொடும் காடுபோந்தான். வரும்வழியில் தீங்கிழைத்த விராதனைக்கொன்று, கரதூஷணாதியருக்கு எமனுலகுகாட்டினான். இராவணன் வஞ்சனை செய்து சீதையைக் கவர்ந்துசெல்ல அதற்குக் காரணமாய் மாயமானுருவொடும் முன்வந்த மாரீசனை வதைத்தான். சீதையைப்பிரிந்த துயரால் வருத்தமுற்றுச் செல்வுழி, சடாயு பெருமானால் இராவணனது தீவினை யறிந்தான். பின்னர், அப்பெருமா னிறந்துபட்டாராக அவருக்குச் செய்யக்கடவ நீர்க்கடன்களைச் செய்தான். மேல் வழிக்கொண்டு செல்லுகையில், சபரியென்னும் மாதவத் தாட்டியாரால் அளிக்கப்பட்ட நல்விருந்துண்டு, அவரால் நின்னையும் நின்னிருப்பிடத்தையுமறிந்து, ஐயனே! நீ நற்றவஞ் செய்திருக்கின்றனை யாதலாலும், குற்றமற்ற மனத்தினையாதலாலும், நின்னொடும் உறவுகொள்ளும் கருத்தினா லிங்குப் போந்தானாவான் எனத்

தேறுதி. நீவிரிருவரும் ஒருவரையொருவர் நேசித்து நட்புக் கொள்ளவிருக்கு மிந்நாளே, வலியினு லிறுமாந்திருக்கும் வாலிக்குத் தீவினை பற்றுதற்குரிய நாளாகும். அந்த வாலியினால் நமக்கு யாதொருதீங்குமினி நேரிடாதெனத்தெளிதி. அவனுயிரிழப்பது திண்ணம். அதனால், அன்புடையரசே! இனியொரு சிறிதுங் காலந்தாழ்த்தலின்றி நின்வரவெதிர் பார்த்திருக்கும், அவ்வுத்தமன் திருமுன்பு என்னொடு மிது பொழுதே போதருவாயாக'' வென்றனன்.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

### சுக்கிரீவன் இராமனை யடுத்தல்.

அதனைக்கேட்ட சுக்கிரீவன் பெரிதுந்தேறுதலடைந்து, அவனைப்பார்த்து ''அறிவின்மிக்க அநுமனே! நின்னை யெவ்வாறு புகழ்வதென அறிகிலேனுய்த் தியங்குகின்றேன். நின்னை யெனக்கு உறுதுணையாகப் பெற்றிலனேயாயின் என்னில்லைமைதான் எத்தன்மையதா யிருக்குமென வுரைத்தல் வேண்டா! ஐயனே! என் தந்தையை ஆசிரியனாக நீ பெற்றது கருதி, எனக்குறுந்துயர் களையநின்றாயெனக் கொள்வேனோ? அல்லது, அறத்தொடு பொருந்திய அறிவினை யுடையையாதலால், என்பாற் பிழையில்லாமை கண்டு, பரிந்து உளமிரங்கி வேண்டுமுதவிகளைப் புரிகின்றனையெனக் கொள்வேனோ? ஒன்றுமறிகிலேன். எழுமையும் நினக்குக் கடமைப்பட்டவனாகின்றேன். ஒருவர் முன்னின்று குணனையுங் கூறுதலாகாது. ஆதலால் என் கருத்தறிவிப்பேனாயின், வெறுமொழியோடுபட்ட முகமனெனக் கருதுவையாதலின் யாதொன்றும் பேசகில்லேன். அன்பனே! நீயே

முன் செல்வாயாக! நின்னைத்தொடர்ந்து யான் வருகின்றேன்'' எனச்சொல்லி யெழுந்துபுறப்பட்டுத் தன்னை யொப்பவன் தானேயாயிராநின்ற இராமனை வந்தணுகினன்.

சுக்கிரீவன் இராமனை வியத்தலும் நட்புக்கோடலும்.

அணுகிவருகையில் தனக்குமுன்னர்ச் சிறிது தூரத்திலமர்ந்திருக்கும் இராமனைக்கண்டான். கண்டு மரகத மலையொன்று தன்னிடத்தே செழிக்கும் செந்தாமரை மலரப்பெற்று, கார்மேகங்களோடு பொருந்தி, ஒளிமதியுதயஞ் செய்யப்பெற்று விளங்குந் தோற்றத்தையொத்த ஸ்ரீராமனை இருவிழிகளும் குளிரும்வண்ணம் நெடிது நோக்கினன். ஆனந்த பரவசமுற்றான். "தவஞ்செய்தோர் தவப்பலன் யாவும் ஒன்றாய்த்திரண்டு, இருகூறு யிருபெருவீரராய் இவ்வுலகத்துத் தோன்றினபோலும். இவரொத்த வீரரும் உத்தமரும் தோன்றினமையால், தெய்வப்பிறப்பு முதலியனவெல்லாம் மானுடத்தால் வெல்லப்பட்டன. அதனாற் போலும் அரிது அரிது மனுடராதலரிது என்பாராயினர். இவர் தம்மைக்காணலுறும் பரிசு எனக்கிருந்தமை கருதியே அநுமனும் யான் பெருந்தவஞ் செய்திருப்பதாகக் கூறுவானாயினன்'' என்று பலவாறு புகழ்ந்தான். பின்னர் அன்பென்னுங் கடல் கரைபுரள நின்று மெல்ல வந்து இராமனையடுத்தனன்.

அடுத்து வந்த சுக்கிரீவனை யன்போடு கூடிய உள்ளத் தண்ணலாகிய இராமனும் வரவேற்று இன்மொழி கூறி இவ்விடத்திலமர்க வென்றனன். அம்மொழியைத் தன்னிரு செவிகளுக் கமுதமென ஏற்ற சுக்கிரீவன் மனம் மகிழ்ந்து

இராமன் முன்னர் அமர்ந்திருந்தனன். பின்னர் இன்மொழி யொடு முகமன் கூறுவானாகி, 'உலகிற்கொரு தலைவனாகத் தோன்றி அறங்காத்துவரு மன்னவனே! எளியனேனாயினும் நின்னை யடையப்பெற்றமையால் பெரும்பேறு பெற்றனன். அதனால் என்போல் உலகத்துத் தவஞ்செய் துயர்ந்தார் யாவரேனுமுளரோ?' என்றனன். அதுகேட்ட இரகு வீர னும் 'அன்பனே! குற்றமற்றதவத்தினையுடைய சபரி யென் பாள் இம்மலையின்கண் நீ வாழ்ந்துவருதலை யெமக் கறிவித் தனள். அதனால் நாங்கள் நின்னைநாடி யீண்டுப் போந்தேம். எமக்குளதாகிய பெருந்துயர்தானும் நின்னுதவியால் தீர்வ தாயிருத்தல் நோக்கி, நின்னைநாடி யுற்றுதவி வேண்டி வந்தேம்' என்று தன்னெண்ணத்தைத் தெரியச்சொன்னான்.

### சுக்கிரீவன் மனநிலை.

இராமன் கூறியதைக்கேட்ட சுக்கிரீவன், மனம் மிகக் கலங்கி, 'உலகிற் குயிரெனச்சிறந்த ஓங்குபுகழ்த் தசரதன் புதல்வராய்ப்பிறந்த இவர் தம்மையும் விதிதன் கொடுமைக் காளாக்கிவிடுமாயின் நம்போல்வாரை ஏனோ நலியாது? நமக்குளதாகிய பெருந்துன்பமின்னதென அறியாராதலால், நம்மை யொருபொருட்படுத்தி நம்மால் தம்துயர் தீர்த்துக் கொள்ளக் கருதிவிட்டனர் இவர்கள். அந்தோ! உதவி நாடி யுற்ற இவரிடம், யானுமொரு பெருங்குறை யுடையேன். அதனைப் பரிகரித்தற் கியலாதவனாய்த் தவிக்கின்றேனென எவ்வாறு கூறுவது?' என்று தியங்கி பின்னர், 'உண்மையைக் கூறுதலால் வருங்குற்றமும், குறைவும் இல்லையாதலால், நம் நிலைமையை இவரிடம் உள்ளவா றுரைத்திடுதலே சால் புடைத்தென்று துணிந்து, இராமனை நோக்கி, 'இரவிகுல

நாயக! என்னிலைமை யின்னதென நீ யறிதல் வேண்டுமென விரும்புகிறேன். ஆதலால் யான் மொழிவதைச் சற்றே கேட்டருள்க. என் முன்னவன் வாலியென்பான் என்னிடத்துத் திராப்பகைகொண்டு தன்னுடைய மூரண்வலித் தடக்கையோச்சி என்னுயிர் கவர்வான் நின்றனன். அவனாற்றலுக்குடைந்து எங்கெங்கும் புகலிடந் தேடியோடியும் பயன்படாதாக இக்குன்றம் சார்ந்தேன். ஒருசாபத்தினால் தடுக்கப்பட்டவனாதலால் நீருகண்ட சர்ப்பமென அடங்கி இவ்விடத்தே அவன் வாரானாயினன். எனினும் எனக்கவனிடத்துண்டாகிய பேரச்சம் ஒழிந்தபாடில்லை. அஞ்சி யஞ்சிச் சாகின்றேனல்லால் உயிர்துறக்க லாற்றேனாயுளேன். இந்நிலையனாகிய எளியனேன் நின்னைச் சரண்புகுகின்றேன். என்னைத் தாங்குதல் நின் கடனாவதொன்றோ பேரறமாகும். ஆதலால் ஐயனே! எனக்குறுதுணையாய் நின்று என் துயரொழித்தருள்வாய்' என்று தனது துயர்நிலையை யுரைத்தனன்.

### இராமன் மனநிலை.

உரைக்கவே, 'இவன் நம்மினும் அதிகமான துன்பத்திலயர்ந்தவனாயுளன். நாம் கேட்டவற்றிற்கு நேரான விடை தந்திலனெனினும், தன்னுவின்னதாகியநிலைமைக்கண் உதவி செய்தற்கியலாதென வொருவாறு தெரிவித்திருக்கிறான். நம்மினும் இவன்நிலையே வருந்தத்தக்கதாயுள'தென வுன்னி, மனமிரங்கிச் சுக்கிரீவனை நோக்கி, 'அன்பனே! கவலாதொழிவாயாக. உலகிற் பிறந்தா ரெவருமே துன்பமற்ற வாழ்வினைப் பெற்றாரிலர். இன்பமும்துன்பமும் இணைவிடா வாதலால், சிலகால மின்பமும், சிலகாலந் துன்பமும் அநுபவித்

துத் தீரவேண்டுமல்லாமல், எக்காலத்தும் ஒருசேரத் துன்பமோ அல்லது இன்பமோ துய்த்தல் கூடாதாகும். துன்பமுற்றவர்க்கல்லால் இன்பமில்லையாதலால், நினக்குளதாம் துன்பந்தானும் இன்பவாழ்வை யுதவுதற்காகி யுளதேயன்றி, மற்றில்லையெனத் தெளிவாய். அன்பனே! கலங்காதே கொள். நின்னையுற்ற இன்பமே எனக்குரிய இன்பமாம். நின்னையுறுந் துன்பத்தை என் துன்பமெனக் கொள்வதேயல்லால் நினது துயரென வேறுபிரித்துக்கொள்வேனல்லன். இதற்கு முன்னர் நினக்குற்ற இன்பதுன்பங்கள் கழிந்தனவாதலால் அவை நீக்கி, இனிவந்துறுவனவாகிய இன்பங்களை நின்னொடு யானும் பெற்று இன்புறுவன். துன்ப மடுத்துவரின் யானதனை முயன்றுதீர்ப்பன். இதுபொழு துளதாகிய இன்பமோ அல்லது துன்பமோ எதுவேயாயினும் சரி. அதனையே யெனக்கு முளதாகக்கொள்வேன்' என மொழிந்தான்.

நட்புறுதிப்பாடு.

அதனைக் கேட்டுநின்ற மாருதியுளத்தே சிறிது உவகை பூத்தது. அவன் எதிர்நோக்கி நின்ற கருத்து இராமன் வாய்மொழியில் வந்ததாகவில்லை. என்செய்வான்! பலவிதமான எண்ணங்களை மேற்கொண்டான். வாலியினால் துன்பமுறும் நம் தலைவனது இன்பதுன்பங்களைத் தானும் தனதாகக்கொண்டு அநுபவிப்பதாக எந்தல் கூறுவதை நோக்கினால் நம்போல வுடனிருந்து வாழ்வது கருதினனென்று கொள்வதோ? அன்றி வேறெவ்வாறு கருதுவது? என்றாராய்ந்து கொண்டிருந்தான். அப்பொழுது சுக்கிரீவனை நோக்கி இராமன் "உத்தம நண்பனே! யான் மற்றுரை விரிக்க விரும்புவேனல்லன். குணத்தால் மிக்கோரே யெனி

னும் நின்னைப் பகைத்தார் என்னைப் பகைத்தோரே யாவர். குணமிலாக் கொடியரே யாயினும், நினக்குக் கேளாயுற்றவர் எனக்குக்கேளாயுற்றவரே. நின்னுறவின் முறையார் என்னுறவின் முறையாரே யாவர். எனது சுற்றத்தார் இனி நினது சுற்றத்தாரேயன்றி மற்றில்லை. உயர் குணத்தவனே! இன்னும் வேறுரைக்க வேண்டுவதில்லை. முன்பு எந்தைக்குப் புதல்வர் நால்வரேயாயினேம். காடு போதருகையில் குகனொடும் ஐவராயினேம். ஈண்டுப்போந்து உத்தம நின்னொடும் அறுவராயினேம்" என்று உறுதியொடுபட்ட இன்சொற்கள் பல புகன்றான். அவை மாருதி செவியிற் புகுதலும் மெய்ம்மயிர் பொடிப்ப நின்று ஸ்ரீ ராமனது அடியிணைகளில் வீழ்ந்திறைஞ்சினன். அருகிலிருந்த தாரன், நீலன், சம்புமாலி முதலிய வானர வீரர்கள் அதனைக்கண்டு ஆரவாரஞ் செய்தனராய் இராமனைத் துதித்தனர். சிலர் தங்கள் தலைவனாகிய சுக்கிரீவனுக்கிருந்த தவப்பயனை யுயர்த்துக் கூறுவாராயினர். சிலர் அஞ்சனைச்சிறுவன் அறிவின் திறத்தினை வியந்து கொண்டாடுவாராயினர்.

---

## ஆறாவது அத்தியாயம்.

### சுக்கிரீவன் விருந்தளிக்க ஒருப்படல்.

இஃதிவர்கள் நிலைமையாக, இராமனது மலர்வாயினின்றும் தோன்றிய சொல்லமுது சுக்கிரீவனுக்குப் புத்துயிரளித்தது. அதுபெற்ற சுக்கிரீவன் மிகப்பணிவொடு இராமனது பெருந்தகைமையை மனத்தாற் பெரிதும் பாராட்டுவானுயிராநின்றனன். அந்நிலையில் 'நம் குறை முடித்தற்பொருட்டு முன்னர் வாக்களித்தபடியே நம் பெருமான்

கவிக்குல நாயகனோடும் நட்புக்கொண்டான். இராவணனுதி யோரால் நமக்குளதாம் இடர்ப்பாடும் இனி இல்லையாகும். இராவணன் முதலிய அரக்கர் தொலைவது திண்ணம்' என்று, மனமுவந்தவராய்த் தங்கள் நன்றியைப் பூமழை பொழிவித்து விண்ணவர் மண்ணவர்க்குத் தெரிவித்தனர். இவ்விடத்துப் பூமழை பொழிய இலங்கையிற் சிற்சில விடங்களில் உற்பாதம்போல எரிகொள்ளிகள் வீழ்ந்தன. இலங்கேசனது வெற்றிக் குறிகுறியாய்த்திகழும் நிவந்தோங்குமுயர்கொடியின்மிசைப் பருந்தமர்ந்து சென்றது. வாலியின் மனையகத்துள்ளார் யாவர்க்கும் இடமும் வலமுமாக மாறித் தோள்களும் கண்களும் துடித்தாடின. இஃதிங்ஙனமாக இராமனடியிணைகளில் வீழ்ந்திறைஞ்சிய அநுமன் அவனை நோக்கி, 'வீரமாமகள் விரும்பிய தோள்களையுடைய அண்ணலே! நீயும் எந்தலைவனும் நின் தோழனுமாகிய இவனும் நீடுவாழியரோ! யாங்கள் பிறவிப்பயன் பெற்றவராயினேம். அதனால் எமக்கு இனி யாதொரு குறையும் உளதாவதில்லை. ஆண்டகையீர்! நீவிர் திருவுளம்பற்றி எமதிருக்கையெய்தி, அதனைப் புனிதமுறச்செய்து பின்னர் எம்மோடு போந்துரையாட வல்லீரேல், அதுகொண்டு யாங்கள் இம்மையிற் பெறவேண்டிய பெரும்பேறு பெற்றவராவேம். நுமது கருத்தென்னையோ?' என்று நுணங்கிய கேள்வியனுதலால் வணங்கிய வாய்மொழியாற் றெரிவித்தனன். அம்மொழியைச் செவியேற்ற இரகுவீரன் அவனை நோக்கி, 'அஞ்சனைக்கொரு சிறுவ! விழுமியதே விளம்பினை! நீ விரும்பியவாறே செய்வோம். யாண்டுச்செல்லவேண்டுமோ அவ்விடத்திற்கு எம்மை யழைத்துச்செல்லுதி' என்றலும், ஆஞ்சனேயன் அவர்தம்மைப்பணிந்து முற்செல்ல இராமனும் சுக்ரீவனொடு

அவனைத் தொடர்ந்து பின் செல்வானுயினன். அப்பொழுது தருமதேவதை தனது மனமார்ந்த வாழ்த்தை அவர்க்குரித்தாக வழங்கி அவரைப் பின்பற்றிச் சென்றது. முன் சென்றவர், விருந்தினரைச் சேய்மையிற் கண்டு இன்முகங்காட்டி, அதுபற்றி அவர் நண்ணியவழி இன்மொழி பகர்ந்தும், இசைந்தவழி யவரை நன்குற்றியுமொழுகும் நல்லறமாகிய இல்லறத்துக்குன்றுது நின்றெழுகும் பண்புடையாளளைப் போல கண்ணுக்கினிய பசிய நிறம்பொருந்திய தளிர்களொடு தேந்துளி சிதறி, பூந்துணர் துறுமி, வீசுதென்றலால் தேசுபெறக் கிளைகளை அசைத்தாடித் தன்னையுற்ருர்க்குச் சுவைநனி படைத்த தீங்கனிகளையுதவும் பழுமரங்கள் நிறையக்கொண்டதாய், வெய்யவன் வெப்பத்தால் வாடி வருந்தியுற்ருர்க்கு, இன்னிழல் தந்து இளைப்பாற்றும் சிறப்பினதாய், அருந்தவத்தினர் அடுத்துறை வாழ்க்கைக்குரியதாய் நின்றோங்கும் ஓர் உயர்நிலைப்பொழிலையடைந்தனர்.

அடைந்தவர், ஆண்டுச்சுக்கிரீவனுணையாலிடப்பட்டதொரு புஷ்பாதனத்திலமர்ந்து, அவனெடும் இன்னுரையாடியளவளாவினர். அவ்வாறிருக்கையில் தங்கள் தலைவனது குறிப்பறிந்த வானரவீரரிற் சிலர், விரைவிற்சென்று அவர் தமக்காகிய நல்விருந்தளித்தற்பொருட்டு உயர்வகைக் கனிகளாகிய வாழை, பலா, மா முதலியனவும் பிறவும் எளிதிற் றேடிக்கொணர்ந்து முன் வைத்தனர். அதனைக்கண்ட சுக்கிரீவன், இராகவனை நோக்கி, “அருள் சுரந்தளித்த அண்ணலே! அடியனேன் உய்யும் வண்ணம் என்னுலளிக்கப்படும் விருந்தேற்றுண்டருளல் வேண்டும்” என்றனன். இராமனுமதற்கிசைந்து தன்னிளவலொடும் சென்று பொய்கையில் நீராடித்துமடியுடீஇப் பின்னர் விருந்துணலாயினன்.

## தாரையொற்றனை யேவல்.

இஃதிவர் நிலைமையாக, வாலியின் மனைவியாகிய தாரை யென்பாள் தனக்கு அந்நாள் ஒரு முறையேயன்றிப் பன் முறையும் தோளும் கண்ணும் வலமாகத் துடித்தாடுதலை யுன்னியொன்றும் தோன்றாதவளாய் அயர்வாளாயினள். பின்னர்ச்சிறிதுபோழ்து பின் வருமாறு நினைப்பாளாயினள். "நமக்கு ஒரு நாளுமில்லாதவாறு இன்றுமட்டும் இவ்வாறு தோள் வலந்துடிக்கவும், கண்வலமாடவும் நேர்ந்தமைக்குக் காரணந்தான் யாதாகவிருக்கும்? மகளிர்க்கெல்லாம் இடந் துடித்த லன்றே நன்மையாமென்பர். அதற்குமாறாக நமக்கு வலந்துடியாநிற்றல், ஏதாவது தீங்கடுக்கு மென்பதற்காகிய அறிகுறியேபோலும்! அங்ஙனமாயின், அந்தகனும் அஞ்சு தற்குக்காரணமான அருந்திறல்படைத்த நம் கணவனிருங் கையில், நம்மை யெவ்வகையான இடர்வந்தடுக்கும்! ஒன்றும் தெரிதற்கில்லையெனினும், நாம் எதற்கும் முன்னெச்சரிக்கை யாகவேயிருப்பது நலம்'' எனக்கருதித் தன்னகத்துள்ள ஒற் றரிற்றேர்ந்தவனும், அறிவு, அனுபவங்களினால் மிக்கவனு மாகிய, ஓரொற்றனையழைத்து, 'பிராரியாவண்ணம் நீயிவ் விடத்தினின்றும் வெளிச்சென்று, சுற்றிலுமுள்ளவிடங் களில் யாதேனும் விசேடமுண்டோ வெனத்தெரிந்து வந்து உரைப்பாயாக' என்று பணித்தனள்.

## ஒற்றன் ஒற்றுடல்.

தாரையால் அனுப்பப்பட்ட ஒற்றனும் அடுத்துள்ள நாற்புறமும் யாதொரு விசேடமுங்காணப் பெறாமையால், மேற்போதருகையில் ரிஷியமூக மலைச்சாற்புறத்தே வந்தணு

கினன். அவ்வெல்லேயில் வானரவீரர்களது ஆரவாரத்தைச் செவியுற்று, அன்னூர்ந்து நோக்கினன். நோக்கவே, ஆண்டுச் சில வானரவீரர்கள் தங்கள் குதூகலத்தினுல் பலவிதமான விளையாடல்களில் மனஞ்செலுத்திக் கொண்டாட்டத்திலிருத்தலை யுணர்ந்து "ஈண்டிருப்பவர் நம்தலைவனுகிய வாலியின் வலிக்கஞ்சி யோடியொளித்திருக்கும் சுக்ரீவனேப்பின்பற்றிப் போந்தோராவர். இவர்கட்கு இன்பந்தானும் இதுகாறும் இல்லையாக அச்சமே யுளத்திற் குடிகொண்டிருந்தது. இது காலையிவர்கள் அச்சமில்லாதவராய் ஆடிப்பாடிக்களிப்பதற்கு ஆகிய நிலைமை யெற்றுலெய்தியதோ? இதனை யாராய்ந்தறிதல்வேண்டும்" என்று நிர்மானித்து, மேலிருப்பவர் தன்னை யறியனுருவண்ணம் மறைந்து சென்றுனுகி, இராமன் இலக்குவனெடு, சுக்ரீவன் உபசரித்தளிக்கும் விருந்துண்ண அமர்ந்திருத்தலைக்கண்டனன்.

கண்டவன் இராம இலக்குமணர்களைச் சிறிதுநேரம் உற்றுநோக்கிப் 'பாழிப்புயமும் சூழிச்சடையும், மரவுரிதாங்கிய மெய்யும், வரிவில்லேந்திய கையும் உடையராகிய இவரொடு இக்கவிக்குல நாதனுக்குளதாகிய நட்பின் முறைதான் யாது? இவ்விருவருக்கும விருந்தளிப்பான் நிற்கின்றனன் சுக்கிரீவன். அவனையடுத்து அஞ்சனையின் அரும்பெறற் புதல்வனுகிய அநுமான் அகத்தடங்கா மகிழ்மீதூரப்பணிவொடு வேண்டுவன உடனின்றுதவுகின்றுன். விருந்தினராகிய இவ்விருவரும் தோற்றத்தால் அரசகுமாரர்போலத் தோன்றினும் வேடத்தால் முனிவரொப்பக்காணப்படுகின்றனர். இவ்விருக்குக் குரங்குகளொடுவந்த உறவுதானென் னுண்டு? இவ்விராது புதிய நட்பினைப்பெற்றதனுற்போலும்

இவ்வானர வீரர்கள் அளவுகடந்த ஆனந்தத்தால் ஆரவாரஞ் செய்வதுமேன்? வில்லேந்திய காத்தினராகிய இவரைக்கண் டுற்ற அஞ்ஞான்றே இவர்கள் உயிர் குலைந்திருக்கவேண்டு மே? அவ்வாறின்றி அளவளாவுவாராகி மிக்க வாஞ்சை யொடும் உரையாடுதலை நோக்குமிடத்து, இதனில் ஏதாகிலு மொரு விசேடமிருந்தே தீரவேண்டும். அதனை எவ்வாற்ரு னும் அறிந்து செல்வதே தக்கதாகும்'' என்றுறுதியிட்டு அவருரைகள் தன் செவியிற்றெளிவாகப்படலாவதோர் மறை விடம் நாடி இன்னும் அணுகியுற்றுக் கவனிப்பானாயினன்.

அதுபொழுது வானரவீரரிற்சிலர், இராம இலக்குமண ரது வரலாற்றிலுள்ள ஒவ்வொன்றையும் தத்தமக்குத் தோன் றியவாறே உயர்த்துக்கூறுவாராகித் தங்கள்தங்கள் கருத்தே மேலானதென வாதிட்டுக்கொண்டனர். அதனைச்செவிகளா ரக்கேட்ட ஒற்றன், இராம இலக்குமணரது வரலாற்றினை முழுவதும் ஒருவாறொழுங்குபடுத்தியுளத்தமைத்துக்கொண் டனன்.

## இராமன் மனநிலை.

பின்னர், மெய்யன்பினனாகித் தன்னின்னுயிர்த் துணை வனுக்கு நல்விருந்தளிக்கின்ற சுக்கிரீவன், மாருதியுதவியால், தானொருவனுயிருந்துபசரித்தளித்தனன். அதுகண்டு இரா மன் "இல்லறத்துற்றோர் விருந்தினரை யேற்று நன்றாற்றுங்கா லையில் சதிபதிகளாயிருந்தளிப்பதன்றோ முறைமை. அங்ஙன மின்றி இவன் தானொருவனுமே யிருந்து ஏற்றுபசரிக்கின் றான். மாருதியோ இவனைக்குறித்துச்சொல்லுகையில் "பரு வரற்கொருவனுமி என்னொடுமிருப்பதானான்'' என்று கூறி னான். அறிந்தேன் அறிந்தேன்.முன்னெல்லாம் இன்ப துன்

பங்களோ இவனும் இவன் இல்லக்கிழத்தியுமாக விருந்து அநுபவித்தமையும், இதுபொழுதைக்கு இவன் மனைவி இல்லாமலிருப்பதையும் அறிவினனாகிய அநுமான் 'ஒருவனாகியென்னொடு மிருப்பதானான்' என்றதனால் தெரிவித்துளன் என்று சிந்தித்துக்கொண்டிருக்க, இராமனது சிந்தனை விருந்திற் செல்லாது வேறு செல்லக்கண்ட சுக்கிரீவன், அதன் உண்மை யறியாதவனாய் "தசரதன் றருதவப்புதல்வ! அடியனேற்கருள் சுரந்தளித்த அண்ணலே! அறியாதுபிழை எதாகிலும் செய்திருப்பேனாயின் அதனைப்பொறுத்தருள்வாயாக! விருந்துண்ணாது காலந்தாழ்த்தலும்எதுகருதியோ?" எனப்பரிந்து வினாயினன்.

சுக்கிரீவன் வினாவியதைக்கேட்ட இராகவன் அவனை நோக்கி 'அன்பனே! நீ பிழையொன்றும் செய்தாயில்லை. பிழை செய்தனையாயின் அதுவன்றே யான் பெறும் பயனாகும்! நண்ப! விருந்தினாயுற்றாரை யுபசரித்தேற்று நன்றாற்றுதல் என்பது சதிபதிகளாகிய இருவருக்கும் கடனாவதொன்றே? முறைமையுமாகும். அம்முறையாலன்றி நீ யொருவனே நின்று விருந்தளித்தலையுன்னி அதன் காரணத்தைத்தெரிய விரும்பினேன். நிறை குணத்தவனே! என்னைப்போல நீயும் நின்வாழ்க்கைத்துணையைப் பிரிந்துளாய்கொலோ? என்னிடமதனைக் கூறலாகுமெனில் தெரிவிப்பாயாக!' வென்றனன்.

அம்மொழி கேட்டுச் சுக்கிரீவன் சிறிது உளம்மயங்கினானாக 'நம் தலைவன் தனது நிலையையெடுத்துப் பேசுதற்கு உளமொடுங்கி நிற்கின்றான்போலும். அவன் தன்குறையைச் சொல்ல நேர்வானல்லன். ஆதலால் யாம் விளக்க எடுத்

துரைத்தலே யமை வுடைத்தாகு' மெனக்கருதி அருகி லிருந்த மாருதி எழுந்திருகைகூப்பி நின்று "நீதியையுடைய நேமியாய்! யான் மொழிவதனைச் சற்றே பொறுத்துச் செவியேற்றருளல் வேண்டும். இவன் தன் வாலாற்றை நீ யறியச்சொல்லாது வேறியாவரிடமே சென்றுரைப்பேம். ஆதலால் என்மொழியை யாதரித்தருள்புரிவாயாக"வென்று பகர்வானுயினன்.

---

## ஏழாவது அத்தியாயம்.

### வாலி வரலாறும், வலிமையும்.

அழிதலில்லாத வேதமே யன்ன மலைகள் நான்கு சூழ்ந்துகிடக்க, அவற்றின் நடுவணமைந் தோங்கிய தொரு மலையின் கண் திரிசூலமுடைய சிவபெருமானது திருவருட் பேற்றினையுடையானுகிய வாலியென்பா னொருவனுளன். அன்னவன் இந்திரனருளி யமைந்து பெரிதுடையபுதல்வன். இனிமையும் குளிர்ச்சியும் பொருந்திய சந்திரன் தழைத்தா லன்ன, வெண்மை நிறமுடையான். தன் பகைவரை யழித் தற்கு உசாவிவருதலானும், வேகத்தானும், பகைவரை யொருங்கே யழியச் செய்தலினுலும், ஆற்றெணுக் கோபத் தானும், தன்னையடைந்தார்க்கு அருள் புரிதலானும்,இனிமை யானும், குன்று நிலைமையானும், பெருமையானும், காற்று, நெருப்பு, நீர், நிலமென்னும் நாற்பெரும் பூதங்களையும் முறையே யொப்பான். நாடோறும் எட்டுத்திசைகளினிறு தியினுமுற்று அட்டமூர்த்தியாகிய சிவபெருமானது திரு வடிப்போதுகளைச் சிரமலாராகச்சூடித்தியானித்துவரும் பெரு மையுடையான், நாடோறும் எட்டுத்திசைகளி னிறுதியும்

ஒருவனாற் சென்றுவா வியலுமோ? என ஆசங்கித்தல் கூடும். ஐயனே! அவன் எழுந்து புறப்படுவானேயாயின் அவன் வேகத்திற்குப் பின்னடைந்து நின்றொழிதலையன்றி முந்துறுதற்குக் காற்றினாலுமாவதொரு செயலில்லை. துளக் கிலாமலையேபோல் அளவில்லாத போராற்றலுடையான். அண்ணலே! அவன் ஆற்றலைக்குறித்து விரித்துரைக்க மற் றெவையும் வேண்டுவதில்லை. முன்னர் அமாரும், அசுரரும் மந்தாமலையை மத்தாகவும், வாசுகியைத்தாம்பாகவும் அமைத் துத் திருப்பாற்கடலைக் கடைந்தமுதம் பெறுவான் முயன்ற னர். ஆண்டகையே! உலகில் மக்களின் மிக்க ஆற்றல் படைத்தவராவர் அமரர்கள். அவரினும் மிக்க ஆற்றல் படைத்தவராவர் அசுரர்கள். ஆக, அவ்விருதிறத்தவரும் ஒரு சோ நின்று பாற்கடலைக் கடைவான் முயன்ற காலை மந்தாமாகிய மத்து ஒரு முறையேனும் சுழன்றதாகவில்லை. அதுநோக்கி அவர்கள் மனங்கவன்று செய்வ தின்னதென்று ஓராதவராயிருக்கையில் காலைக்கடன் கழிக்கவெண்ணி ஆண் டுப்போந்த வாலியினிடம் குறையிரந்து வேண்டினர். அதற்கு அவன் அவ்விருதிறத்தாரையும் நோக்கி, 'நீவிர் ஒருபுற மொதுங்கி யிருப்பீரேயாயின், யான் ஒருவனே யிப்பாற் கடலைக் கடைந்து, உமக்கு அமுதளிப்பன். அன்றேல் நும் மிலொருவனாக விருந்து கடைதற்கிசையே' னென்றானாக, அவர்களும் அதற்கிசைந்தனர். அதன்மேல் கடன் கழித் துக்கொண்டு, பின்னர் தேவாசுரர்களை ஒருபுறமாக வொதுங்கி யிருக்கும்படி செய்து வாசுகியின் தலையொடு வாலைத் தன் னிருகரங்களாற் பற்றி அக்கடல் வயிறு கிழியும்படியாக மத் தால் தயிர்கடையும் ஆயர்குலச் சிறுமியரேபோல் அதிவிரை விற் கடைந்து அவர்க்கு அமுதளித்துதவிய அளவிலாற்ற

லான். அவன் கடல் கடைந்த நாளில் மந்தரந்தாங்கிய பேராமையும் முதுகு தெளிந்து பேரிடர்ப்பட்டதை யறியாதார் யாவரே? அத்தகைய பேராற்றலொன்றோ அவன்பாலுளது? அவனைப் பகைத்துப் போர்செய்ய அடுத்தவர் எத்திறத்து வரத்தினரேனும் அவரது வரத்துச் செம்பாகம் தானெய்தும் பெருவரத்தினன். அவனது தோள்கட்கமைந்த திண்மையை யென்னென்றுரைப்பேன்? அண்ணலே! தனது வலியால் உலகமெல்லாவற்றையும் தன்னடிப்படுத்துத் தன்னையே கடவுளென யாவரும் போற்றிவரும்படியாகச்செய்த இரணியனது மார்பைப்பிளந்த நரசிங்கந்தானும், அவ்வாலியினது தார்கிடந்ததோள் தகையவல்லதோ? அவனது மலையொத்தகன்ற மார்பிற்கமைந்த வன்மையை என்னென்பேன்? குருகுபெயர்க்குன்றம் துளைபடுத்த முருகனது கூரிய வேலேயாயினும் வாலியினது மார்பை யூடுருவிச்செல்லுமாற்றல் பெற்றதில்லை. தோளிற்கும் மார்பிற்கும் அமைந்த திண்மை வன்மையே யன்றி, அவனது வாலினுக்குற்ற வலிமையை யென்னென்பது? திக்குவிஜயம் செய்வதற்கெனப் போந்த இராவணன் ஒருகால் வாலியினளவுகடந்தஆற்றலின் நிலையுணராதவனாய், அவ்வாலி பொய்கைக் கரையில் காலைப்பொழுதிற் சந்திசெய்துகொண்டிருக்கும் சமயத்திற் கண்டு பிடித்துச் சிறைகொள்ள வேண்டுமென விரும்பிக் கயிறு கொண்டணுகினன். அதனையுணர்ந்த வாலி தான் இடம் விட்டுப் பெயராமலும், அவனை யேறெடுத்துப் பாராமலுமிருந்து, தன்னையவனடுத்த காலையில் தன்வாலினாலிருக்கப் பிணித்துச் சிறைகொண்டனன். அதுமட்டோ? வழக்கத்தின்படியே எழு கடலும் சென்று மூழ்கியெழுகையில் இராவணனையும் மூழ்கியெழுமாறு செய்தனன். அம்மம்ம!

அவன் விரைந்தெழுந்து ஒவ்வொரு திசையினிறுதிக்கும் செல்லுகையில் மூச்சு விடுவதற்குமியலாதவனாகி, இராவணன் பட்ட பாட்டினை யாவரே யெடுத்தியம்ப வல்லார்? அதுபொழுது அவ்விராவணனது உடலினின்றும் பெருகிய இரத்த நீர் சிந்தாத உலகந்தான் ஒன்றிருப்பதாகக் கூறுவது எளிமைப்பாலதே யாகும். அம்மட்டோடு அவனை விட்டுவிடாமல் தன்னகங்கொண்டுபுக்கு ஆங்கு அவனைத் தன் மகனாகிய அங்கதனது தொட்டிலின் மேற்றட்டில் ஒரு பூச்சியையொப்பப் பிணித்து வைத்தான். அதனையறிந்த மலரவன் வாலிபாற் சென்றிரந்து வேண்ட அவன்பொருட்டு அவ்விராவணனொடு நட்புக்கொண்டு அவனைச் சிறை நீக்கி விடுவித்தனன். அச்செயலிற்குப்பின் இராவணன் வாலியின் வால் சென்றிருப்பதான இடத்தில் தனது அகங்காரச்செயல் புரிவானல்லனு பொடுங்கினன். எனினும் அவன் வாலியின் உயிர்த்தோழனாகிவிட்டபடியால் இனி வாலியின் வால் ஒழிந்தாலன்றி இராவணனது கோலும் குடையும் அழிவைப் பெறுவென்பது முடிவான உண்மையாகும். அண்ணலே! அவன் தன் ஏவலிளைஞராய் நின்று வாழ்வோரும் அவன் தன் உறவின்முறையாருமாகி வாழ்நர் தொகையால் எழுபது வெள்ளவானர வீரராவர். அவ்வீரருக்குரிய வாழ்நாளுலப்புறினும் அவர்க்கு மரணபயம் கிடையாது ஏனென்றால் வாலியின் கோபத்திற் கஞ்சினவனாதலால் மனத்தைரியமில்லாது வாலியினிருப்பிடத்தை நண்ணுதற்கும் பின்வாங்குவானாயினன் யமதருமனும். அதற்குத் தான் காரணம் வினவின் ஐயனே! வாலி கோபிப்பானேயானால், அவ் யமன் தப்புவதற்கு ஓர் அரணுமில்லை. அதனால் அவன் அவ்வாறு நடுங்குவானாயினன்.

காற்று எங்குமுளதாகிச் சலனப்படுவதூஉம் கடலானது தன் கரைகடவாமல் அடங்கிநிற்பதூஉம் சூரிய சந்திரர்கள் தாம் தேரின்மீதேறி உலகைச் சுற்றி வலம் வருவதூஉம், வாலியின்வலிவை யஞ்சியேயாமெனில், வேறினியாம் அவன் ஆற்றலைக்குறித்து விளம்புவதூஉம் வேண்டுமோ? அன்னவன்எமக்கு அரசனுயிருந்துஅளித்துவர இளவலாகிய இவன் இளவரசனுயிருந்தனன். அக்காலத்தே தன்வலியொன்றேயன்றி வாலியின் வலி இவ்வளவினதென்று அறிந்திலனுய், மாயாவி என்னும் வாளவுணன் அவனொடும் போர்குறித்து வந்தான். வந்த அவனொடு வாலியும் போர் நேர்ந்து தாக்கித் தடக்கையோச்சிக் குத்துவானுயினன். வாலியின் ஆற்றலுக்கெதிர் நிற்கமாட்டாதவனுகித் தன்னுயிர்பிழைப்பதே கருதி, எவ்வுலகத்தும் ஓடிப்பார்த்தும் பயனின்மை யறிந்து ஒரு பெரும் பிலத்தினுட் புக்கொளித்தனன்.

அவனை விடாது பற்றிச்சென்ற வாலி அங்கவன் பிலத்தினுட் புக்கமைகண்டு இளவலாகிய இவனை நோக்கி, 'இளையோய்! யான்சென்று இவ்வரக்கனைக் கொன்று கடிதின் வருவேன். அதுவரையும் நீ சிறிது காவலைச்செய்வாயாக' என மொழிந்து கோபமாருதவனுப்ப் பிலத்தினுட் புக்கனன்.

புக்கவன் இருதுபதினுன்கு ஆகியும் மீண்டானல்லன். அம்மாயாவி என்னும் வாளவுணனைக் கொல்வான் முயன்றிருந்தான் போலும். தன் முன்னவன் நெடுங்காலமாகியும் மீண்டுவாராமையுன்னி இளையோனுகிய இவன், மனங்கவன்று அருகிலிருந்த எம்மை நோக்கி 'அன்புடையீர்! இந்நாள் வரையும் என் முன்னேன் மீண்டானில்லை. ஒருகால் மாயாவியின் வஞ்சனைக்காளாயினன் போலும். அதனுல் இப்

பிலத்தினுட்புக்கு அவனை நாடுவன். அவ்வசுரன் தன் மாயையால் இன்னல் விளைத்திருப்பானேயாயின் அவனோடு என்னாலியன்ற அளவும் போர்செய்து பழிக்குப்பழி வாங்கு வேன். அதுவன்றேல், அவன் கையாலே உயிரிழக்கப்பெற்று முன் சென்ற என் முன்னவனைத் தூக்கத்திற்கண்டு களிப் பேன். ஆதலால் நும்மிடம் விடை பெற்றுக்கொள்கின் றேன்' எனச் சொல்லிப் புறப்படுவானாயினன். அது கண்டு எம்மில் அறனறிந்து மூத்த அறிவுடையோர், இவனுக்கு ஆறுதல் பலகூறி உளந்தேற்றி 'ஐயனே! நீ மொழிவது சால வும் போற்றத்தக்கதே எனினும் யாம் கூறுவதூஉ மொன் றுண்டு. அதனைக்கேட்பாயாக. நின் முன்னவனது ஆற்றலை நீ யறியாய் போலும். இம் மூவுலகினும் அவனை யெதிர்த்துப் பொர வல்லவர் யாவரேயுளர்? எதிர் நிற்கமாட்டாது உயிர் பிழைப்பது கருதி யோடிய மாயாவியோ எதிர்க்கவல்லான்? நன்று! நன்று! நின் முன்னவன் நினக்குச் சொல்லியது தான் யாது? 'நீ சிறிதுபோழ்து காவல் செய்தனை யாகி யிருத்தி' என்பதன்றோ? அம்மொழியைப் புறக்கணித்துச் செல்வதூஉம் நினக்குப் பொருந்துமோ? நெடுநாளாகியும் மீளாதிருத்தலால், அவன் இறந்துபட்டிருத்தலும் கூடுமென் றன்றோ நீ ஐயுறுகின் றயர்கின்றனை? அவ்வாறாகுமெனின், நின்னையும் அம்மாயாவி வஞ்சித்துக்கொல்ல முயல்வானல் லனோ? அந்நிலைமைக்கு நீவிரிருவரும் ஆளாவீராயின் தலை வரையின்றி யாங்கள் எங்ஙனம் ஏமமுற்று வாழ்தல் கூடும்? இன்ன பலவற்றையும் சிந்தித்துப்பார்க்கின், இப்பிலத்தினுள் நீ செல்ல விரும்புவது தக்க தன்றாம். அதனாற் செல வொழிப்பாயாக. வாலி ஆணையின்படியே அரசு நின்னதா கின்றமையால், அரசேற் றெம்மைப் புரந்து வருவாயாக.'

என வற்புறுத்திக் கூறினர். அப்பொழுதும் பழுதென்று உளம்பரிந்து மறுத்தனன். பின்னர் மதிவலியுடையார் மிகவும் வற்புறுத்தலாகவும், நியாயவாயிலாகவும் அமைசேற்றுக் கொள்ளும்படி புகன்றனர். பின்னர் வேறு வழியொன்றுமில்லாமையா லெம்மாற் கொடுக்கப்பட்ட அரசபதவியை யேற்றுக்கொண்டனன்.

அரச பதவி மேற்கொண்டும் அப்பிலத்தின் வெளிப்புறமே சில நாள் தங்கியிருந்தான். அந்நாளும், வாலி, மாயாவி என்னும் இருவரில் ஒருவரும் மீண்டாரல்லர். அதனால் எங்கள் வேண்டுகோளுக்கிணங்கிக் கிட்கிந்தை வரச்சம்மதித்தான். சம்மதிக்கவே வாலி இறந்துபட்டானெனக்கருதினேமாதலால், அரக்கன் வெளிப்போந்திடாதிருக்கும் பொருட்டுப் பெரிய மலைக்கற்கள் கொண்டு அந்தப்பிலத்துவாரத்தை யடைத்துப் போந்தேம். போந்து இவனுளுகைக்குட்பட்ட குடிகளாகி வாழ்வேமாயினேம்.

---

## எட்டாவது அத்தியாயம்.

### வாலி சுக்ரீவன்பால் வைரங்கொண்ட காரணம்.

அக்காலம் மாயாவியின் உயிரென்னும் கள்ளையுண்டு களித்த வாலி தன் பின்னவனும் மற்றையோரும் காத்திருப்பாரென நினைத்து விரைவிற் போதுகின்றவன் பிலத்துவாரம் கற்கொண்டடைக்கப்பெற்றிருத்தலைக் கண்டான். காணவே கோபம் விஞ்சியது. 'மாயாவியினும் கொடியன் நம் இளையோன். வஞ்சனையாற் கொல்லவிரும்பித் தருணம் பார்த்து அது செய்ய முற்பட்டான். நன்று! நன்று! நெடுங்காலம்

போர்புரிந்து நின்றேன். அதனால் இறந்தவனாகக் கருதின வன் மீளவும் ஐயங்கொண்டு மீண்டுவாராவண்ணம் பிலத்துவா ரத்தை யடைத்து விடுவோம் என் றுன்னிச் செய்தான்போ லும்' என எண்ணமிட்டு அம்மலைக்கற்களை யப்பாற்படுத்தி, கால்விசைத் தெழுந்து கிட்கிந்தை நோக்கிப்பாய்ந்து வருவா னாயினன். அண்ணலே! அவன் வேகத்தை என் னென் பேன். மேருவே முதலாக உள்ள குலமலைகளெல்லாம் தத் தம் நிலைமாறிப் பெயர்ந்தன. சூரிய சந்திரர்கள் கதிமாறித் தவித்தனர்.

அவ்வாறு வந்த அருக்கோபத் தன்னைக் காணப் பெற்றமைக்கு மனமகிழ்ச்சியும், தன் தவற்றினுக்குத் திகிலும் கொண்டவனாய் இவன் விரைந்தெழுந்து அவன் பாதங்களில் வீழ்ந்திறைஞ்சினான். பின்னர்த் தன் முன்னவனை நோக்கி, "அருந்திறல் படைத்த அண்ணா! நினது ஆணையை யஞ்சிச் சிறியேன் அரசேற்றளியா நின்றனன். இது நானுத்தக வுடைத்து. எனினும் சிறியனேன் பிழைபொறுத்து அரசினை மீளவும் நீ யேற்று எம்மைப்புரந்தருள்வாய்," என்று பணிந் திரந்தனன்.

## வாலியாற் சுக்ரீவன் அடைந்த துன்பம்.

அவ்வருமையைச் சிறிதும் பாராட்டாது வெஞ்சினம் மனத் தின் மூளத் தன் இளையோனெனவும் நினையாமல் வீணிற் பலகுற்றங் கற்பித்துக் கொடுமைகள் கூறினான். அவ்வள வோடும் நில்லாமல் இவனுயிர் கவர்வான் முற்பட்டு இவனைப் பற்றி யாங்களெலாம் குடல்கலங்கி யுளநடுங்கும்படி, முன்னர்க் கடல் கடைந்த வெங்காதலங்களா லுடல்கடைந்தனன். இவ

னுலேந்தனன். அம்மம்ம! நினைத்தலும் கொடிதே காண்! நாக் குழறுகின்றது. மனம் கலங்குகின்றது: உளம் நடுங்குகின்றது. மெய் வியர்க்கின்றது. அண்ணலே! இரு பெருமலைகள் ஒன்றோடொன்று மோதுகையி லிடைப்பட்டதொரு குரங்கொத்துத் தவித்துக் கூவுவானாயினன். இவனுக்கு அங்கிலேயில் உதவுவார் உயிர்கட்கிரங்கும் தனிப்பரம்பொருளையன்றி வேறு யாவரேயாயினர்? வலுத்துப் பருத்த அவனது கைகளினின்றும் சற்றே பிடிவழுவப் பெற்று இவன் எங்கெங்கும் ஓடி உயிர் பிழைக்க நேர்ந்தும் ஒன்றும் பயன்படாதாயிற்று. பின்னர் அப்பரம்பொருளின் திருவருட்பேறு இவனுக்கிருந்தமையால், இவன் இம்மலே யடுத்தனன். இம்மலையடுத்தாஞக, செம்மலே நற்கதியடுத்தது. இங்குப்போதர வாலியின் மனம் துணியவில்லே. எற்றுலெனின்? மதங்கமுனிவரது சாபமொன்றுண்மையால் அவன் துணிந்தானில்லே. அன்புடைத் தோன்றல்! அச்சாபத்தின் வரலாற்றினைக் கேட்டருள்க.

## துந்துபி வரலாறு.

மயன் மகனும் மலேயொத்த தோற்றத்தை யுடையவனும் இந்துவைத்தொட நிமிர்ந்தெழு மருப்பிரண்டுடையவனும் துந்துபி யென்னும் பெயரினனுமாகிய ஓரவுணன், பண்டொரு நாள் திருமாலிடஞ்சென்று 'என்னெடும் போர் புரிவாயாக' என்றனன். திருமால் அவனைக்கறைமிடற் றண்ணல்பாலனுப்ப அவ்வண்ணலும் அவனை 'அமரர் கோனிடம் செல்லுதியேல் நலம்' என்றனுப்பினுன். அதன்மேல் இந்திரனையடுத்துப் போருக்கழைத்தாஞக அமரர்கோனும் 'வாலிபாற் செல்லுதி' என்றனன். அம்மொழிகேட்ட துந்துபி வாலியிடம் சென்று 'போர் செய்யவல்லேயேல் என்னேடமர் புரிக' என்ன, வாலி

யும் அதற்கு நேர்ந்தான். இருவரும் பெரும்போர் செய்தனர். மிக்க வலியினனாகிய வாலி அடங்காச்சினத் தரியேறொப்ப ஆா வாரித்து அவ்வரக்கனது இருமருப்புகளையும் பற்றித்திருகி விசையோடு குத்தி உயிர் வாங்கியதோடமையாது அவனுட லைச் சுழற்றி விண்ணிலெறிந்தான். அவ்வுடலானது விரிஞ்ச னுடற்று இம்மலைச்சாரலில் தவஞ்செய்துகொண்டிருந்த மதங்க முனிவரது ஆச்சிரமத்தின் அருகே வீழ்ந்தது. வீழ்ந்ததனாற் சிதறிய அரத்தநீரால் ஆச்சிரமம் தூய்மை யிழந்தது. அத னைக்கண்ட முனிவர் வெகுண்டு இவ்வடாத செயல்புரிந்தவனா கினும், மற்று அவனைச் சார்ந்தவராகினும் இம்மலையை யடுத்து வருவாராயின் அவரது சிரம் வெடித்தொழியக்கடவது' எனச் சபித்தனர். அச்சாபமொன்றில்லையாயின் இவன் புகல் புக லாவதோரிடந்தான் எங்கேனும் உளதாகுமோ? வாழியரோ மாதவத்தினர்தாம்! இவையெல்லாம் ஒருபுறம் நிற்க, மற் றொன்றுகேளாய் அருள் மிகுத்த அண்ணலே! இவனுக்குரிய தாரமாகிய உருமை யென்பவள் அருமருந்தனையளாய் இவ னுடனுறைவாழ்விலுதவி வருவாளாயினள். அவள் செய்த தீங்கொன்றின்மை தெரிந்தும் பிறனுக்குரியளென்ப துணர்ந் தும் அதனிலும் தன்னிளவனுடைய இல்லக்கிழத்தியென்பது அறிந்து வைத்தும் கொடியவனாகிய வாலி அவளை விரும்பி னான். அம்மட்டோ! இவனைக்கொல்வான் நின்றதூஉமன்றி இவன் மனைவியையும் கவர்ந்தான். கேமியாய்! தலைமையே யன்றி மனைவியும் இழந்து அளவில்லாததுயருக்குத் தானொரு வனேயாகி யுழன்று, ஈண்டென்றெடும் வாழ்வதானான். அது பற்றியே இவன் தானொருவனுயிருந் தனக்கு விருந்தளிக்க நேர்ந்ததூஉம் அன்றி வேறில்லை' என்றனன்.

## இராமன் வாலியைக் கொல்வேனெனல்.

பொய்யிலாதவனாகிய அநுமான் சுக்கிரீவனது வரலாற்றை முறைமையாற் சொல்லக் கேட்டு நின்ற இராமனது செந்தாமரை மலரன்ன கண்கள் ஆம்பலஃபோதென மிக்குச் சிவந்தன. செவ்விதழ் துடித்தது எனினும் வெண்ணிலாக் கற்றையை எயிறு பொழியும் வண்ணம் முறுவலரும்பியது. உறுவதென்கொலெனத் தேர்கிலாய் அருகிலிருந்தார் யாவரும் நின்றவா நின்று இராமனையே நோக்குவாராயினர். இராமன் முறுவல் கொண்ட பொருள் அறிகிலம் எனினும் அவன் திருமுகம் சிறிது முனிவுகொண்ட நிலைமையைத் தெள்ளிதினுணர்த்தியது. பொள்ளென ஆங்கே முகம் வியராது நிதானித்து அகத்தடக்கிய சினத்தையுடைய இராமன், சுக்கிரீவனை நோக்கி 'அறிவுடையோய்! நின்னிலையிருந்தவாறு நன்று. ஓராற்றானும் உதவுதற்கிலனாகி யுயிர்கவர்வான் நின்ற வாலியின் மனவலி யதனினும் நன்று. ஆருயிர் நண்ப! அஞ்சுதலொழி! உலகமொரு மூன்றும் அவனுக்கு உற்றுதவி செய்யினும் என்கைவாளிக்கு அவன் உயிரை விருந்தாக அளிப்பன். இதுமட்டோ? அவன் கவர்ந்த நின் தாரத்தை மீட்டும் நின்பால் தருவன். அதுவுமன்றி அவனால் துன்புழந்த நினக்கு இன்பமுளதாக, அவன் தலைமையையும் கொடுப்பன். அன்பிற்குகந்தோய்! அவ்வாலி யென்பான் உறைவிடங் காட்டுதி' என்றனன்.

'ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றன ளென்ன
ஆரம் வீங்குதோள் தம்பிக்குத் தன்னர சுரிமைப்
பார மீந்தவன் பரிவில னொருவன்தன் தம்பி
தாரம் வவ்வினன் என்றசொல் தரிக்குமா றுளதோ?'

## ஒன்பதாவது அத்தியாயம்.

### சுக்ரீவன் ஐயப்பாடு.

இராமன் சினந்து உறுதியோடுரைத்த மாற்றத்தைச் செவியேற்ற சுக்கிரீவன் முதலிய வானரவீரர்களுக்கு மனத்தில் அளவு கடந்த ஆனந்த முண்டாகியது. சுக்கிரீவன் மன மிக மகிழ்ந்தன னென்றாலும், தன் முன்னவனாகிய வாலியின் வலியை மட்டும் ஐயமறத் தெரிந்துகொண்டிருக்கிறான். அதனால் இராமன் மொழிகளில் நம்பிக்கை பெற்றானில்லை. இராம இலக்குமணரது தோற்றத்தமைப்பினால் அவர்களைச் சிறந்த வீரர்களாமெனத் தெள்ளிதி னுணர்ந்தா னெனினும், வாலியைக் கொல்வதற்காகிய ஆற்றல் இவர்பாலிருக்குமோ? இராதோ? என ஐயுறவு கொண்டான். அதனால் இராமனை நோக்கி 'அருள் மிகுந்த அண்ணலே! எளியனேன் பொருட்டுப் பேருதவி செய்தருள முற்பட்ட நின்கருணைத் திறத்தை என்னென்பேன்? நின் மொழியினால் எளியனேன் துயரெல்லாம் பானுவைக்கண்ட பனிபோல் இல்லையாயின், ஐயனே! சற்றே திருவுளம்பாலித்து யாங்கள் ஒரு சிறிது யோசனை செய்ய அநுமதி தரல் வேண்டும்' என்று பணிந்துரைக்க, இராமனும் அதற்கிசைந்தான்.

இசையவே விடைபெற்றகன்ற சுக்கிரீவன், தன்னுடைய மந்திரிகளாகிய அநுமான், தாரன், நீலன் முதலிய வானர வீரர்களோடும் ஒருபாற் சென்றிருந்து தன் கருத்தை வெளியிடுவதற்கு வாய்திறந்தான்.

### அநுமன் அறிவுரை.

அப்பொழுது அநுமான் அவனை நோக்கி 'ஐயனே! நீ கருதியது இதுவென்பதனை யான் அறிந்தேன், அதாவது

அளவில் போராற்றற் படைத்த வாலியைக் காலனுக் களிப்ப தோராற்றல் இவ்வீரன்பா லுளதாகுமோ என்றயிர்த்தனே. அதனைக் குறித்து உசாவுதற் பொருட்டே ஈண்டு நீ போந்த துடமாகும். 'வினை வலியும் தன் வலியும், மாற்றான் வலியும் துணை வலியும் தூக்கிச் செயல்' என்றார் பொருள் நூலுணர்ந்த பொய்யில் புலவர். அம்முறையே நீ ஆராய்வான் நின்றது உம் நலமே எனினும் அறிவுடையோய்! யான் தெரிந்தவையும், கேட்டவையும் ஆகியவற்றை முன்னர்த் தெரிவிக்கின்றேன். அவை கேட்டுப் பின்னர் நின் கருத்திற்கிணங்குமதனைச் செய்வாயாக' என்று சொல்வானுயினன்.

உலகில் எத்துணையோ வீரர்கள் தோன்றி யிருக்கிறார்களெனினும், அவர் எல்லோரினும் இவ்விரகுவீரன் சிறந்தோனுதல் தேறினேன். அதாவது இவ்வீரனது கைகால்களில் சங்கு சக்கரக் குறிகள் உள. இக்குறி பொன்றுமட்டுமன்று, இவன்பால் ஓராண்மகனுக்கு (அதிலும் உத்தம வீரனுக்கு) அமையவேண்டுவனவாய இலக்கணங்கள் யாவும் ஒருங்கே யமைந்திருக்கின்றன. இத்தகைய அமைப்பு வேறியாவர்க்கு மில்லையென்பதுறுதி. அதனுல் செந்தாமரையன்ன கண்களையுடைய இராமன் அத் திருமாலையன்றி வேறொருவனல்லன். திறத்து மாமறை யயனொடைம் முகன்பிறர் தேடிப், புறத்த கத்துணர் வரியதன் பொலனடிக் கமலம், உறச் சிவப்பஇத் தரைமிசை யுறுவனே அத்திருமாலெனின், அவன் தொழில் தான் யாது? உலகத்தை யளித்தருள்வதன்றே? வலியராகி மெலியாரை நலிகின்றார் அரக்கர் முதலியோர். அதனுல் தருமம் பீடிக்கப்படுகின்றது. அத் தருமத்தை முன்னிலைக்குக் கொண்டுவருவதற்கும், அதற்கு

மாறுபெழுகின்ற மறத்தை வீட்டுதற்கும், திருமா லுலகில் தோன்றி யுளனென்பது அறிதி. இதுவே யுண்மைபென் பதற்கு அறிவினேப்! யான் மொழிவதனைக் கவனமாய்க் கேட்பாயாக! செருக்குற்று உயிர்களைத் துன்புறுத்தி உலகிற் பேரிடர்செய்துவந்த மூன்றசுரரையும் அவர் தம்முப்புரத்தோ டெரிந்து சாம்பராகும் வண்ணம் சினந்தழித்த சிவனது போரடகத் தனிவில்லிறுக்கும் வன்மை அம்மாயவனுக்கு அன்றி மற்றெவர்க்கேயாயினும் உளதாகுமோ? அதுவுமன்றி மற்றொன்றுரைப்பன். முன்னொருநாள் எந்தையார் என்னை நோக்கி 'உலகமெலாம் படைத்த நான்முகனை முன் படைத்தானைத் தெரிசித்து அவனுக் கேவல்செய்து வாழ்தலே மேற்கொள்ளுதி. அதுவே சிறந்த தவமாகும்.' என்றார். அதற்கு 'அவனை யான் எங்ஙனம் அறிவது' என்றேன். எவனொருவனைக் கண்ட அளவில் நின்னை யறியாதேயும் அன்புமீதூரப் பெறுகின்றதோ அன்னவனே அத்திருமாலென அறிந்து மேவுதி' என்றனர். அவர் வாய்மொழிப்படியும் இவனே அத்திருமாலென்பதற்கு ஒரெள்ளளவினுலும் தடையில்லை. ஏனெனின், என் யாக்கையின் என்புதோன்றல. அவையன்பால நெக்குருகின. இனியும் உருகுகின்றன. அரசே! இவற்றாலும் நீ யுளந்தேறினை யல்லையெனின், நின் மனத்து ஐயுறவகல்வதற்காகிய ஒருபாயம் உளது. அதாவது, இவ்வழியிரா நின்ற ஏழு மராமரங்களி லொன்றை இவ்வீரனது வெஞ்சரம் துளைபடுத்துச் செல்லுமாற்றல் பெற்றதேயாயின் வாலியின் மார்பைப் பிளக்கும் ஆற்றல் இவன் கைவாளிக் குளதெனத் தெற்றெனத் தெளியலாம். அது கண்டுகொள்' என்றான்.

ஆராய்ந்தளந்த அநுமான் அறிவுரையால் மனமிக மகிழ்ந்து அவனது கூரிய மதியை வியந்து, நன்று நன்றென்று நனிபாராட்டி மலைகளும் நாணும்படி ஓங்கிய அவனது பெரும் புயங்களை இறுகப் புல்லினன். பின்னர் இராமனைக் குறுகி 'அண்ணாலே! எம்மொடுபோந்து இவ்வழியிலுளதாகிய எழு மராமரங்களி லொன்றை நின் கைவாளியூடுருவிச்செல்லுமாறு விடுத்து அருள் புரிவாயேல், அதுபொழுதே எளியனேன் மனச்சஞ்சலமும் ஒழிவதாகும். ஐயனே! நினது போராற்றலைச்சோதிக்கும் விருப்புடையேனல்லன். என் முன்னவனை யஞ்சி யுயிர்குலைந்திருக்கும் எனக்கு மராமரங்களை ஊடுருவிச்செல்லும் நின்னம்பானது புத்துயிரளிப்பதாகும். அதனால் அன்புடைத் தோன்றால்! அருள்புரிதியோ?' என்றிறைஞ்சினன்.

ஒற்றன் கருதியது.

இவையெல்லாம் மறைவிடத்திருந்து ஒற்றிக் கேட்டுக் கொண்டிருந்தவன் 'ஓகோ! இவர் துணை பெற்றுவந்து இவ்வானர வீரர்கள் களித்தமைக்குக் காரணம் இப்பொழுது அறிந்தேன். இவ்வீரரால் தமக்கு உற்ற துயர் நீக்கிக் கொள்ள விழைகின்றனர். இவர் கருத்திற்கேற்ப இராமனும் நம் தலைவனாகிய வாலியைக் கொல்வதாக உறுதிமொழி கூறிவிட்டான். இவை யெல்லாம் அறிவின்மிக்க அநுமானாலாகியவையேயாம். 'தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச், செற்றார் செயக்கிடந்ததில்' என்ப. நம் தலைவனாகிய வாலியோ இதுகாறும் யாவராலும் வெல்லப்படாத மேலோங்கிய நிலைமையில் இருந்தனன். இருக்கின்றான். அவனுக்கும் ஒழிவுகாலம் கிட்டியதுபோலும்?. அரக்கராலும், அமர

ராலும், அவரின்மிக்க மூவராலும் நம் தலைவன்வலி தொலைக்க வியலுமோ? கேவலம் இவர்கள் சாதாரண அரசகுமாரரே யாவர். எனினும் இவரைப் பார்க்கும் அளவில் மூவரின் மிக்க பேராற்றல் படைத்தவரொப்ப விளங்குகின்றனர். இவ்வளவோடு நாம் சென்றுவிடுதல் கூடாது. இவர்கட்கு நம் தலைவனை யெதிர்ப்பதற்குரிய ஆற்றலுளதெனக் கொள்வதற்கும் ஓராதாரம் வேண்டுமன்றே! ஆ! ஆ! நன்று! இராமன் மொழியில் நம்பிக்கை பிறவாமையால், அவன் பொற்றோள் வலிநிலை சோதனைபுரிவான் நசையுடையனாகி, மராமரங்களிலொன்றை வாளிவிடுத்துத் துளைபடுக்குமாறு வேண்டுகின்றனன் இச் சுக்கிரீவன். இவன் உளந்தேறுமாறு அம்பெய்து இராமன் காட்டுவானேல் அதுவே நமக்கும் சிறந்த வோராதாரமாகும். அதன்மேல் இங்குக் கண்டவற்றையும், நம் கருத்தையும் நம்தலைவியிடம் வெளியிடலாகும்' என்றுன்னி அமைதியாயிருந்தனன்.

### இராமன் மராமரந் துளைத்தல்.

மறுவிலானாகிய சுக்கிரீவன் முன்னிய முயற்சியையுன்னி முறுவல் செய்தவனாய், இராமன் தன் வலித்தடந்தோள்களாற் சிலையை நாணேற்றி அறிவினால்அளப்பரியவையாயிராநின்ற மராமரங்களைச் சென்றணைந்தான். சென்று கடல்சூழ்ந்த உலகைத் தாங்கிய அரும்பெருங்கிரிகள் ஏழும் ஒருவழி நின்றனவோ என்னலாந்தகுதியினவும், ஊழி பேரினும் பேர்விலாதனவும், எந்நாளும் ஓடிச்செல்லும் அருக்கனது தேர்ப்பரிகட்கு நிறைந்த நிழல் திசைதோறும் பரப்பிய வான்கிளைகளுடையனவும், நீதரும் பெருஞ்சாகைகள் தழைக்கின்ற செயலால் வேதங்களை யொத்த பெரு

மையை யுடையனவும், மேருமலையினும் மிக்க பழமை வாய்ந் தனவும், இந்திரன் மைந்தனாகிய வாலிக்கும், இரவிசுதனாகிய சுக்கிரீவனுக்கும் அமைந்த உள்ளத்தை யொப்ப ஒன்றி னொன்று உள்வயிர்ப்புடையனவும், ஒன்றினுக் கொன்றி விடை நெடிது யோசனை யுடையனவுமாகிய மராமரங்களை நோக்கி நின்றனன். அமலன் பின்னர் தூயவார்கழை தூரப் பதோர் ஆதரம் தோன்றச் சேயவானமும் திசைகளும் செவிடுறத் தேவர்க்கு எய்திலாததோர் பயம்வரச் சிலையை நாணெறிந்தான். நாணெறிந்து மொய்கொள்வார் சிலை நாணினை முறையுற வாங்கி வெய்யவாளியை யாளுடை வில் லியும் விட்டான். அந்த அம்பானது மராமரமொன்றே யன்றி எழினையும் ஊடுருவிச் சென்றது. இராமன் ஒரு மரத்துளையுற அம்பு தொடுக்குமாறு வேண்டிக்கொள்ளப் பட்டானெனினும், சுக்கிரீவன்பால் ஆராத அன்புடைய பெருவள்ளலாகையால் தன்னன்பினுறுதியை எழு மடங் காக்கிக் காட்டினன். அதாவது எழுமடங்கெழுந்த ஆதரத் தினால் எழு மராமரங்களும் துளைபட அம்பு ஊடுருவிச் செல்லுமாறு விடுத்தான். இன்னும் சற்று நயம்பட வுரைப் பின் சுக்கிரீவனுக்கு எழுமையினும் தன்னாற்றலைக் குறித்து ஐயுறவுண்டாதல் கூடாது என்னும் கருத்தால் எழு மராமர மும் துளையுறச் செய்தானெனலாம்.

## அம்பின் பெருமை.

அம்பானது விசைத்தெழுந்து எழுமரங்களையும் கடி திற்றுளையுறச் செய்தமை கண்டு, எழுகன்னியரும், எழு முனிபுங்கவரும், எழு குலமலைகளும், எழு உலகங்களும், எழு வேலையும் கலக்கமுற்றன. எதனாலெனின், இவ்வம்பா

னது ஏழு என்ற எண்ணுள்ள பொருள் யாவையும் ஒருங் கழிக்கவேண்டுமென வருவதுபோலும் எனக் கருதினமையா லென்க. ஏழு என்னும் எண்ணும் நம்மையும் இவ்வம்பா னது தாக்குமே என எண்ணமிட்டதெனின் வேறினியாது கூறவேண்டும். அன்னதாயினும் அறத்தினுக்கு ஆருயிர்த் துணைவனு மிராகவனால் விடப்பட்டதாதலின், அம்பானது மறத்தொடு பொருந்திய கொடுமை செய்யாதென அவை தேறின. மரந்துளைபடுத்த கூரிய பகழியோ மீட்டும் இராகவனது வெந்திடாத ஆவம் புக்கது.

வானரர் மகிழ்ச்சி.

ஓம்பினுலெழு மரங்களையும் துளையுறச்செய்த இராமன் ஆற்றலை வியந்து, அவன் அடியிணைப்போதுகளில் வீழ்ந் திறைஞ்சி, 'உலகிற்குயிராய் அறத்திற்காருயிராய் நின்றருள் புரியும் நினது பெருமை யறியாமல் சோதிப்பான் முற்பட்ட எனதொரு பிழை பொறுத்தருளல் வேண்டும். நாயினும் கடைப்பட்ட அடியனேன் உய்ய வந்தருளினை. நின்னருள் பெற்ற எனக்கு உலகிலரியதொரு பொருள் இல்லை. அன்னை யொத்த அன்பினுய்! எழுமை எழு பிறப்பும் நின்னடியார்க் கடியனுய் நின்று குற்றேவல் புரிவதையன்றி வேறெவ்வகை யால் நினக்குக் கைமாறு செய்யவல்லேன்?' என்று நயவுரை கூறினன். சந்தோஷ மிக்க உள்ளத்தராய் இவ்வரும் பெருஞ்செயல் செய்த இராமனை வியந்து பலவாறு கொண் டாடித் துதித்து வாழ்த்திக் குதூகலித்து,

"ஆடினர் பாடினர் அங்குமிங் குங்கலர்
தோடினர் உவகையின் நறவையுண் டுணர்கிலார்
சேடினும் வாலிகா லனையெனு செடிதாள்
வாடினர் தோளெலாம் வளரமற் றவரெலாம்."

இவர்கள் அதன்பின் போதருகையில் துந்துபியின் எற்புச் சட்டத்தைக் கண்ணுற்றனர். இதனைக்கண்ட இராமன்,

"தென்புலக் கிழவனூர் மகிடமோ திசையின்வாழ்
வன்புலக் கரிமடிந் ததுகொலோ மகாமீன்
என்புலப் புறஉலர்ந் ததுகொலோ இதுவெனு
அன்புலப் பரியநீ யுரை செயாய்."

என அநுமானை நோக்கி வினவினன். அநுமானும் 'அண்ணலே! வாலியினுலிறந்த துந்துபியின் எற்புச்சட்டமிது. இவ்வெற்புச்சட்டம் முன்னர்வாலியாலெறியப்பட்டு விரிஞ்ச நாடுற்று மீண்டது. இவன் வரலாற்றை முன்னரே கூறியுளேன் என்றனன்.

எனலும் இராமன் தன் இளவலை நோக்கி இளையோய்! நின்னுடைய பெருவலியும் இவர்கட்குத் தெரிவது நன்று. இதனை ஒட்டினை யொதுக்குதல்போல் அப்பாற்படுத்துக' என்றலும், இலக்குவன் கழலணிந்த வலதுகால் விரலினுலுந்தினுன். உந்தவே அவ்வெற்புச்சட்டம் மீட்டும் விரிஞ்சனுடுற்று மீண்டது. அதுகண்ட வானர வீரரும், மாருதியும் தலைவனும் பேரானந்தக்கடலில் மூழ்கினர். வியப்பதன்றி மற்றென் செய்வதெனத் தேர்ந்திலர். ஆரவாரித்தனர் அசனியஞ்சுறும்படியாக வானரவீரர்கள். பின்னர்க் கவிக்கு நாயகன் இராம இலக்குமணர்களோடு சோலைவாய்ச் சென்றிருந்தான்.



## பத்தாவது அத்தியாயம்.

### சுக்கிரீவன் இராமனிடம் சீதையிட்ட அணிகளை ஈதல்.

அவ்வெல்லையில் தன் கருத்திற்றோன்றியதொரு விஷயத்தை வெளியிட விரும்பினன். இராமனும் அதற்கிசைய, 'சின்னாட்களுக்கு முன்னர் யாமிவ்வழியாயிருந்தோமாக இராவணன் தனது தேரோடு மேல்நோக்கிச் சென்றனன். அவன் தேரினின்றும் ஒரு பெண்ணின் அரற்றுக்குரல் கேட்டது. அங்ஙனம் அரற்றிய பெண் நின்தேவியே போலுமெனக் கருதுகின்றனன். சேணெடுந்தூரத்து விமானம் சென்றமையால் யாங்கள் அவள் உருவை நன்கு காணமுடியவில்லை. விமானத்தால் அது இராவணனுடையதென அறிந்தோம். மேல்நோக்கி யாங்கள் திகைத்திருக்கையில் மழைபொருகண்ணிணைவாரியொடு தன் இழை பொதிந்திட்டனள். யாங்களேற்றனம். எற்றதுமற்று மன்றி அவ்வணிகளைச் சேமமுற வைத்திருக்கின்றேம். அவற்றை நின்வயிற்றருகின்றேம். கண்டு மெய்மை தேறுதி' என்று மொழிந்து சென்று தன் குகையில் வைத்திருந்த அவ்வணிகலன்களைக் கொண்டுவந்து கொடுத்தனன். அவற்றைத் தெரிவுற நோக்கினன் இராமன். நோக்கிய பொழுதில்:—

> 'விட்டபே ருணர்வினை விளித்த வென்கெனோ
> அட்டன உயிரையவ் வணிக ளென்கெனோ
> கொட்டின சார்தெனக் குளிர்ந்த வென்கெனோ
> சுட்டன என்கெனோ யாது சொல்லுகேன்'

அவ்வணிகளைக்கண்டமையால் நெடும்பொழுது உணர்வினோடு உயிர்ப்பு நீங்கிய தடம்பெரும் கண்ணனைத்தாங்கிச் சுக்கிரீவன் 'கலைகள்வல்ல காட்சியினாய்! மலரவனுலகத்தை

யும் அதனைக்கடந்து அப்பாற்பட்ட உலகங்களையும் ஒரு சிறிதும் விடாமல் தேடி நினது தேவியை நினக்கு உதவக்கடமைப்பட்டவனாக அடியேனிருக்கையில் நீ இவ்வாறு துயருழப்பதுதகுமோ? திருமகளனைய அத்தெய்வக்கற்பினுள் வெருவரச்செய்த வெய்யவனாகிய இராவணனது ஈரைந்து தலையும் இருபது கரமும் நின்னாலேவப்படும் ஒரு கணைக் காற்றுமோ? ஆற்றா என்னும் உண்மைக்குக்கரியாக அழியாது நின்றுயரும் மாமரங்களே சாலும். அப்பனே! இத்துணையுமேன்? ஈண்டிருத்தி நீ. அவ்வரக்கன் தலையைத் திருகித்தண்டித்து நின்தேவியை நீ கண்டின்புறும் வகையான் கொணர்வன். என் பணிவிடையின் திறனை இதனால் நீ யறிவாய்!"

'என்னுடைச் சிறுகுறை முடித்த லீண்டொரீ இப்
பின்னுடைத் தாயினு மாகப் பேதுறும்
மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்
பொன்னுடைச் சிலையினாய் விரைந்து போய்'

என்றான். அம்மொழிகளாலே ஒருவகையான் உணர்வடைந்து, இராமன் சுக்கிரீவனை நோக்கி, 'அரக்கனாற் சிறைகொள்ளப்பட்டு நிர்க்கதியினளாய் வரிசிலைதாங்கிய மன்னன் வரும் வரும் என்றுன்னி, இமைப்பொழுதும் அயராது என்வரவினை அவள் எதிர் நோக்கியிருக்க, நானெடுஞ் சிலைசுமந்துழல நாணிலேன் யான்,

'தானெடுங் கிரியொடும் தடங்கள் தம்மொடும்
பூனெடும் புலம்பியிப் பொழுது போக்கினேன்'

என் குலத்தரசர்கள் கருங்கடல் தொட்டனர். கங்கை தந்தனர். மாநெடுமறப்புலியும் ஒரு துறையில் நீருண்ண

வைத்தனர். இந்திரனுக்கடுத்த பெருங்குறையைத் தீர்ப்பான் வேண்டி, அடல்வலி யமனாலும் வெல்லுதற்கரிய சம்பரன் என்னும் அவுணனைத் தேய்த்து, கற்பகக்காவின் நீழலில் வீற்றிருக்குமரசினை அவ்விந்திரனுக்குதவி, அழியாப் பெரும்புகழ் படைத்தனன் எந்தை. மற்றவனின் வந்துதித்த யான் கொடிய துன்பத்தையும் பெரும் பழியையும் தாங்கி, அவற்றை மாற்றுதற்கியலாதவனாயுளேன். எந்தையாது மெய்மை வீயுமானால் பழி வருமென்றுன்னி அரசு துறந்து கான் புகுந்தேன். போந்து கரும்பழிசொல்லியைப் பகைஞன் கைக்கொள்ள அவனை யொறுத்தற்கில்லாது கொடும்பழி சூடினேன்' என்று இன்னன கூறித் துயருழந்து மூர்ச்சையுற்றனன். அதுகண்ட சுக்கிரீவன் இராமனுக்குத் தக்க தேறுதல்களேயன்றி நல்ல உபசாரணைகளையும் செய்து ஒருவாறு மனக்கலக்கம் தீர்த்தனன். அதன்மேல் இராமன் அவனை நோக்கி மனம் பரிந்து,

> "ஐயநீ ஆற்றலின் ஆற்றி னேனல(து)
> உய்வனே? எனக்கினின் உறுதி வேறுண்டோ
> வையகத் திப்பழி தீர மாய்வது
> செய்வல்நின் குறைமுடித் தன்றிச் செய்கலேன்" என்றனன்.

## அநுமன் முதற்கண் வாலியைக் கொல்லவேண்டுமெனல்.

எனலும், அநுமான் எழுந்தடி பணிந்து, 'ஐயனே! அடியனேன் கூறுவதொன்றுண்டு. அதனைக் கேட்டருள்வாயாக. தேவியாகிய சீதாபிராட்டியைக் கவர்ந்து சென்றவன் அரக்கர் குலாதிபனாகிய இராவணன் என்பதையறிகின்றோம். அவ்வரக்கருறைவிடம் வானதோ? மண்ணதோ? வெற்பதோ? அன்றி நாகர்தம் இருக்கையேயோ? அவ்வரக்

கரோவெனில், எவ்வுலகங்களிலும் இமைப்பிலெய்துவர். ஒருவனையறியாமல் வந்தடுக்கும் வெவ்வினையொப்ப வந்தடுப்பர். இன்னல் பல கொடுப்பர். அவ்வினைதான் முற்றிய பின் அகல்வதேபோல் பிறரறியாது மீள்வர். அத்தன்மையராகிய அவருறைவிடம் எதுவெனக் கருதுவது? திருமகளனைய தேவியார் உறைவிடம் இதுவென முதற்கண் யாம் தெரிந்துகொள்ளுதற்கு உலகம் யாவையும் ஒருமுறையே பார்த்து சென்றுணரவேண்டும். பெரிது பெரிது புவனம் பெரிது. அவ்வுலகத்திலுள்ள ஒவ்வோரிடமும் வரிசைப்படத் தேடிவருதற்குக் காலம்பற்றாதாகும். பற்றினும் அவ்வாறு தேடிவருதல் அருமையாய்விடும். வானரசேனையோ தொகையால் எழுபது வெள்ளமாகும். அவைகள் பார்த்து செல்ல முற்படுமேயெனின் ஊழியிற் கடலென உலகம் போர்த்துவிடும் ஆற்றல் படைத்தவை. அச்சேனை வீரர்களோ வாலியின் ஆணைவழி நின்றொழுகுவார். வாலியோ இராவணனுக்கு உயிர்த்தோழன். இராவணனே நமக்கு என்றுந்தீரா இன்னலுக்குக் காரணமாகிய பகைஞன். இராவணன்பால் இகலுடைய நமக்கு அவன் உயிர்த் தோழனாகிய வாலியினாணைவழி நின்றொழுகும் வானரவீரர் துணைபுரிவாரெனக் கருதுதற்கியலாது. ஆதலால் வென்றியாய்! யான் கூறுவது யாதெனின், கொடுந்தொழில் வாலியை முதற் கொன்று, இச்சுக்கிரீவனுக்கு அரசுகொடுத்துக் கோமகனுக்கி நெடும்படை கூட்டினலன்றி அநிம்பகை யரக்கர்தம் இருக்கையிதென யாம் அறிபமுடியாதென்பதே. இம்முறையநுசரித்தலே தக்கதென நினைந்தனன். நீதியாய்! இசையுமெனிற் கொள்க'' என்றனன்.

அநுமானது ஆழ்ந்த அறிவின் ஆராய்ச்சியைப் பெரிதும் நன்றெனக்கண்டு அதனை ஒப்புக்கொண்டு 'நாம் வாலியைக் கொல்லுவதற்குப் போதுவோம்' என்றனன். எனவே யாவரும் மனங்களித்தவராய் ஆரவாரத்துடன் எழுந்து புறப்படுவாராயினர். இது நிற்க,

## தாரைக்கு ஒற்றன் செய்திகூறல்.

மராமரங்கள் ஏழும் இராமனது ஓரம்பால் துளைபட்டமையும், இலக்குவனது கால்விரலுந்தியதனால் துந்துபியின் எற்புச்சட்டம் மீட்டும் விரிஞ்சனுடுற்று வீழ்ந்தமையும், அநுமான் விநயமொழியும், இராமன் உறுதிமொழியும் கண்டு நின்ற ஒற்றன் 'இவர்பால் நம் தலைவனை யெதிர்ப்பதற்குரிய ஆற்றல் மிக்குளது. இனி இவ்விடத்துக் காலந்தாழ்த்தலின்றிச் சென்று நம் தலைவியிடம் இங்கு நிகழ்ந்தவற்றைத் தெரியச்சொல்ல வேண்டியதே' என்றுன்னிக் கடிதிற்சென்று தாரையிடம் நடந்தவையெல்லாம் எடுத்துரைத்து 'நாளையே நம் தலைவனோடு, இராமன் துணையிருப்பதனால் போருக்கென வருவான் இளவலாகிய சுக்கிரீவன்' என்பதும் தெரிவித்தான். தாரையோ அம்மொழிகளால் மனங்கலங்கினள். என்றாலும் தன் கணவனாகிய வாலியிடம் அவ்வரலாற்றை உடன் தெரிவித்தாளல்லள். இளையான் போருக்கழைப்பானேயாயின் அதுகாலை நாம் நிகழ்ந்தவை கூறிக் கணவனைத் திருத்திக் கொள்ளலாமென்று நினைந்து வாளாவிருந்தனள். பேதை என்செய்வாள்! கணவனோ வெகுகோபி. மாறுபட நின்றனன் விதியென்னும் ஒரு பாவி.

## வாலியைப் போருக்கழைத்தல்.

இராமனோடு சுக்கிரீவனாதியோர் புறப்பட்டுப் பல மலைகளும், காடுகளும், நதிகளுங்கடந்து வாலிவாழ் பொருப்பிடம்

வந்தணுகினர். அணுகியபின் இராமன் சுக்கிரீவனை நோக்கி 'அன்பனே! நீ வாலியைவலிய அழைத்துப் போர்புரிவாயாக. அதுகாலை என் வில்லிற்றொடுக்கும் அம்பினால் அவன் உயிரை வாங்கிவிடுகிறேன்' என்றனன். அதற்கிணங்கினான் கவிக்குல நாதன். உளமகிழ்ந்தவனைத் துணைபெற்றமையால் அஞ்சுத லொழிந்தவனைப் முன்னவனுயிர்க்கிறுதிமட்டுமென்றி, உறுதி யும் பயக்கலா மென்னும் தீர்மானமுள்ளவனைப் மிக்க ஆரவா ரம் செய்து, தோளொடு தோள் தட்டி 'அகங்காரமிக்கவனே! வால்படைத்த வலிபடைத்த வாலியே? இதுகாறும் நின்னைச் செறும் உள்ளத்தனல்லனாகையால் ஒதுங்கி நின்றேன். இப்பொழுது நீ போர்செய்ய வருவையேல் நின் னு யி ரை யமன் வசம் ஒப்படைத்துவிடுவேன்' என்றுரக்கக் கூவினான். அம்மொழிகள் அமளிமேலொரு பாற்கடல் கிடந்ததேயனைய பான்மையனாகிய வா லி யி ன் செவித்துளைகளிற் சென்று புக்கன.

## வாலி போர்க்கெழுதல்.

அவ்வோசையொடுபட்ட மொழிகளால் இளவல் உருத் தனைப் பொரவெதிர் நிலையினன்போலும் என மனத்தில் எண்ணினான். மலைமுழையில் உறக்கங்கொண்டிருக்கும் வாளரி யொன்று மாற்பெருங் கடகரியின் முழக்கத்தைச் செவித் தலத்தேற்பின் எந்நிலையதாகுமோ, அந்நிலையனாயினான். அதா வது மிக்க பேருவகையுடன் இளவல் உயிர்குடிக்கவேண்டு மென்று உடன் எழுந்தனன். எழுந்ததொன்றோ! தன்னிள வலின் அறியாமை உன்னி வெகுளியொடு பொருந்திய நகை தோன்றச்சிரித்து உலகெலாம் உடல்நடுங்கியுயிர்குலையும் வண் ணம் உரத்துக்கூவி 'வந்தனன், வந்தனன்' என்றனன். அவ்வா

சகம் கீழ்த்திசை முதலாவுள்ள திசையெட்டுங்கேட்டன. வந்தனன் என்றுசொல்லி அவன் எழுந்த காலையில் அவன் நிலைமை விரித்துரைக்கப்போதுமோ? சுருங்கக்கூறுமிடத்து,

'ஞாலமும் காற்றிசைப் புனலும் நாகரும்
மூலமு முற்றிட முடிவிற் றீக்குமக்
காலமு மொத்தனன் கடலிற் றன்கடை
ஆலமு மொத்தனன் எவரும் அஞ்சவே' எனலாம்.

---

## பதினோராவது அத்தியாயம்.

### வாலியைத் தாரைதடுத்தல்.

அவ்வாறு கோபித்தெழுந்த வாலியை அவன் மனைவியும், அமிழ்கிற்றேன்றிய வேய்புரைதோளியுமாகிய தாரை யென்பாள் முன்னர்த்தானொற்றனல் அறிந்த செய்தியை முழுவதூஉம் தெரியச்சொல்ல விரும்புகிலளாய் இடைபுகுந்து 'ஆருயிர்த்தலைவ! அஞ்சலென்றருள்க! ஏழையேன் மொழி செவி ஏற்றருள்புரிக! இதற்கு முன்னெலாம் நின்னெடுபோரெதிர்ந்து நிற்கவில்லாது உயிர்குலைந்து, துயருழந்து, உளமுளைந்து, ஓடி யொளிந்து வாடிவருந்தும் வாழ்வினனாகிய சுக்கிரீவன் இன்று போருக்கழைப்பானேயெனின் அது சிந்திக்கத்தக்க தன்றோ? இன்றும் அவன் தோற்றேடுதலொருதலைபாய உண்மையே யெனினும், அஞ்சி அகன்ற அவன் அடுத்தாவந்து ஆண்மை கூறி அமர்செயற்கழைப்பது கருதின் துணைவலி பெற்றமை யாற் கொண்ட செருக்கையன்றி மற்றும் வேறுண்டோ? அத்துணைதானும் நற்பெருந்துணையன்றேல் நின்வலி முற்று முணர்ந்தவனுக்குப் போரெதிர்வோமென்னும் துணிபுண்டாகுமோ? அன்பிற்குகந்த அரைசே! நன்னெடுந்துணையுடைமை

யால் பொரவெதிர்ந்துற்ற அவனொடும் இதுகாலை போர்செய் தலைத் தவிர்தலால், ஏழையேனுக்குத் தவப்பல உறுதிகளுள வாம்.' என்று மொழிந்துதடுத்தனள்.

## வாலி தன் பெருமைகூறல்.

அதற்கு மறுமொழியாக அன்புகனிந்த உளத்தோடு அவளைநோக்கிப் 'பேதாய்!பெண்ணறிவென்பதுபெரும்பேதை மைத்தே யென்பதொருவாய் மொழியேயென நன்கு புலப் படுத்தினை. என்னோடு உடனுறைவாழ் வினையுடையளாகிய நீயும் என் வலியை அயிர்த்தனை. அது நின்பிழையன்று. நின்பெண்மைக்குளதாய இயல்பினலாயிற்றன்றி மற்றில்லை. மூன்றென அமைந்த பேருலகில் வாழ்வுயிர்த்தொகையாவும் ஒருசேர என்னை யெதிர்த்தாலும், அவை முறிபட்டோடுமே யன்றி எனக்கவைதாம்எவ்வகையால்துன்புறுத்தக்கூடும்? மந் தர நெடுவரை மத்தாகவும், வாசுகி கடைகயிறாகவும்கொண்டு இந்திரர் முதலிய அமரரும் ஏனையோராகிய அரக்கரும் பெயர் வுற வலிக்கவும் மிடுக்கிலராயயர்வுற,யானொருவனன்றே தயிர் கடையுமாகடைந்து அவர்க்கமுதம் அளித்துப்போந்தேன். என்கையால் மாண்டொழிந்த அடற்றகையவுணர் எனைப்பல ரென்றறியாயோ? அமரரை அருந்துயர்க்காளாக்கிய இராவ ணன் என் வாலிற்கட்டுண்டுபட்ட பாட்டினை நீ கண்டிலையோ? என் வலியறியாப்.பேதையரையன்றி அறிந்தார் யாவரே எதிர் குவார்? பொரவெதிர்ந்த பேதையர் எனைப்பலவாகிய தவமும், வரமும், உரனுமுடையாரேயாயினும் என்னுண்டாம்? அவர் தவமும், வரமும், உரனும் ஒருபாதி எனக்குரியவன்றோ? தவத்தையேயன்றி வரமும், உரமும் ஒருபாதியிழந்துகெடு பவர் எவ்வகையால் என்னைவெல்ல வல்லுநராவார் என்பதனை

நீயே புகல்வாய்! என்பெயர் தன் செவிப்பட்ட அளவில் கூற்று வனே உயிர்குலைந்தோடுகின்றானெனின், வேறியாவரே சுக்கிரீவனுக்குத் துணைநின்றுதவ வருவர்? ஆதலால் பெண்மணி! கவலாதேகொள். முன்னர் அக்கடலைக்கடைந்து அமுதுகண்ட வாறு என்னைப்போருக்கழைத்தவன் உயிரைக்கடைந்து உயிர் காண விரும்புகிறேன். அதுமட்டுமன்று, முன்னர் அவ்வமுதினை அமரர்க்கீந்துபோந்தேன். இப்பொழுது இவன் உடலைக் கடைந்து உயிரை யமுதெனப்பருகிப்போதருவேன் அதனால் என்னைத்தடுத்தலை யொழி' என்றனன்.

## தாரை இராமன் நின்னைக்கொல்வானெனல்.

அன்னதுகேட்ட அவள் வாலியைநோக்கி 'இன்னுயிர்த் தலைவ! தசரதன் புதல்வனாகிய இராமனென்பான் அச்சுக்கிரீவனுக்கு இன்னுயிர்த்தோழனாகி, அவன் துயரொழிப்பது கருதி, நின்னுயிர் கோடலுக்கு உடன்வந்துளனென நம்பாற் பொருந்திய அன்புமிக்கார் சொல்லினர். அதனால் என்மனம் கவல்கின்றது. இதுபொழுது போரின்மேற்சேர்தலைத் தவிர் தல் கூடாதோ?' என்றிரந்தனள் கூறினள்.

## வாலிகோபம்.

எனலும் வாலிக்கு அவள்பாலிருந்த அன்பினிலைமாறி, ஆற்றொணாச் சீற்றநிலை தோன்றியது. இளையோன் போருக்கழைத்தமையுன்னி யெழுந்த சீற்றத்தினும் இல்லாள் கூறிய மொழியாற் பெருஞ்சின மூண்டுவிட்டது. வாயினின்றும் தீப்புகையெழாநிற்கவும் விழிகளிரண்டும் தீப்பொறி சிதறவும் ஒரு பெருநோக்கங்கொண்டு, 'எடிபாவி! நின்மதியிருந்தவாறு நன்று நன்று! பிழைத்தனை அறக்கொடியோய் நினது பெண்மையால். அல்லையேல் நின் புன்பொறி நாவைச் சிதைத்

திருப்பேன். இப்பழிச்சொல்லை உலகிற்கு அறநெறிகாட்டிய போந்த பெருமையுடைய இராமனைக்குறித்தோ கூறினை? பேதாய்! அறிந்திலைபோலும் அவ்வேந்தலகரும்பெருங்குணச் சிறப்புகளை? கூறுவன் கேள்! கோசலை வயிற்றிற் பிறத்த லாற் கிட்டிய குவலயமெல்லாம் ஒருங்கெய்தி, மற்றவள் மாற் றவளேவ, அவளேவலைச் சிரமேற்று அவ்வுரிமையை அவள் மைந்தனுக்குப் பேருவகையோடும் அளித்துப் போந்தவ னுவான் இராமன். அவ்வறப்பெரும் செயலை உலகெலாம் உயர்த்தோதும். ஒரு பெரும்புகழுடையுத்தமனைப்போற்றலை. குறைகூறினை. நினக்கிது அடாது. நன்மை கொடாது. தன் தம்பியரையன்றித் தனக்கெனப் பிறிதோருயிரிலதென மேவிய வாழ்வுடை மேலோன், யானும் என் தம்பியும் எதிர்த்த போரில் அம்பு இடைகொடுத்து எம்மிருவரையும் வேறுபிரிக்குமோ? இவ்வுலகெலாம் அவனொடு நெருக்கிப் போர் செய்தலைத் தலைமேற் கொளினும், துணைபாகத் தனது தனி நெடுஞ்சிலையை யன்றிப் பிறிதொரு துணைவேண்டுமோ? தன்னொப்பார் தானேயாகிய தன்மையான் புன்றொழிற் குரங் கொடும் நட்புக்கொள்ளுமோ? நட்புக்கொள்ளுதல் அவனுக் குப் பெருமையோ? அன்றியாதானும் ஒரு பயன்பெறக்கருதி யோ? இபல்பலாதன செயேலென்பர். பேதாய்! நீ இபல்பலா தன சொலேல்,' என வெகுண்டுரைத்துப் பின்னர் 'ஈண்டுச் சிறிதுபொழுது ஆற்றியிருப்பாயாக. இமைநொடிப்பொழுதில் போரெதிர்ந்தவனுயிர் குடித்துப்போதருவேன்.' என்றுரைத் துப் புறம்போந்தனன். தாரையோ அதன்மே லொன்றும் கூறினாளல்லள். அஞ்சியொடுங்கினாள். நன்மையாக வேண்டு மென்று எண்ணமிட்டாள்.

## வாலியின் வருகை.

புறம்போந்த வாலி போரை மிக விரும்பிப் பாய்ந்தெழுந் தனன். எழுந்து அம்மலைச் சிகரத்துச்சி மீமிசை யுற்றனன். உற்றவன் கீழ்த்திசையில் உதயகிரியில் நெடுங்கதிர் பரப்பித் தோன்றிய ஞாயிறுபோலவும் கொலைத்தொழிலையுடைய இரணியனைக்கொல்வதுவேண்டி வன்றூணிடைத் தோன்றிய மாநரசிங்கம்போலவும் தோன்றினன். தோன்றி, ஆண்டு நின்றும், ஆர்க்கின்ற பின்னோனை நோக்கி, யாவரும் நெஞ்சு நடுங்கி யஞ்சும்படி ஆரவாரஞ் செய்து, அம்மலைச்சிகரத்தி னின்றும் தாவி, இளையோனிருக்குமிடத்தைக் கிட்டிவருவா னயினன்.

## இராமன் இளவலிடத்து வாலியைச் சிறப்பித்துக்கூறல்.

அவ்வேலை இராமன் அன்புடைத் தம்பியை நோக்கி, 'ஐய! பாய்ந்துவருகிற இவ்வாலியினுடைய தோற்றத்தைச் செவ்வே செல நோக்குதி! உலகிற்பெரிதும் போற்றப்படுகிற அமரரும் மற்றை அரக்கரும் ஒருபுறமாக நிற்குவோம். ஆர வாரித்தலாலும், அதிர்குரலாலும், வேகத்தாலும், வெஞ்சினத் தாலும், ஊழிக்கடை பெழூஉம் வேலையையும், காளமேகத் தையும், சண்டமாருதத்தையும், உலகெலாமுடிக்கும் அக்கால வெந்தீயையும், இவன் ஒக்கின்றான். உலகில் நாற்பெரும் பூதங்களினாற்றலையும் ஒருசேரப்படைத்த இவனது ஆற்றலை யென்னென்பது?' என்றான் அதற்கு மறுமொழியாக இலக் குவன் 'ஒன்றும் உணர்வுற்றிலன்' என்றான். அவன் மனத் தில் ஓராகுலம் உண்டாகியது. அதாவது 'சுக்கிரீவன் தன் முன்னவன் வாணாளைக் கொள்ளக் கொடுங் கூற்றுவனைக் கொணர்ந்தான். குரக்குச்சண்டையென முடியுமாறில்லை.

இதனல் எத்தகைய பழிபாவம் சம்பவிக்குமோ? என் றெண்ணமிட்டதனலாகிய ஆதலமேயாம். 'நாம் இது குறித்து ஒன்றும் பேசாதிருந்துவிடுவோம்' எனக்கருதி ஞன். என்செய்வான் பாவம்.

இலக்குவன் சுக்கிரீவன் நம்பத்தக்கான் அல்லனெனல்.

நெஞ்சின் மிக்கது வாய்சோரும் என்ப. அங்ஙனமே ஆற்ருதவனுகி இராமனை நோக்கி 'ஆண்டகாய்! அறத்தாறு அழுங்கத்தேற்ருது செய்வார்களைத் தேறுதல் செவ்விதன் றென்ப சிலர். மாற்ருனெனத் தம் முனைக்கொல்லுதற்கு வந்து போருக்கு நின்ருன். அதுமட்டுமன்று. தன் முன் னவனைக் கொல்லுவதற்காக ஒரு பெருங் கூற்றுவனைத் துணைக்கொண்டு வந்துநின்ருன். இவன்செய்கையில் எனக்கு மனவமைதி ஏற்படுமாறில்லை. தன் முன்னவனை மாற்ரு னெனக்கருதி கொல்லுதற்கு முற்பட்ட இவன் வேற்ருராகிய நம்மிடத்து, எத்தகைய அன்புடையனுக விருத்தல் கூடு மென்பதனை அறியவேண்டினேன். இவன் நமக்காகிய உதவியைச் செய்வானென எத்திறத்தாற் கொள்வது? 'எண்ணித்துணிக கருமம், துணிந்தபின் எண்ணுவமென்ப திழுக்கு' என வேதமொழி சாற்றுகின்றது. இதுவும் நீ யறியாத தொன்றன்று. எல்லாமறிந்த நினக்கு யான் எடுத் துக்கூறுத லேழைமைப்பாலதே. எனினும் மனமாற்ருமை யாற் கூறினேன். வீர! பிழைபொறுத்தருள்க' என்றனன்.

அதற்கு இராமன் கூறிய சமாதானம்.

அம்மொழிகேட்ட இராகவன் தன்னிளவலை நோக்கி, 'என் அப்பனே! சிரியதே செப்பினை! ஒப்பருங்கேள்வி யுணர்வினையாதலின் உத்தம நன்னெறி கடைப்பிடித்தொழு

கல் வேண்டினை. விழுமியதே! ஆறறிவுபடைத்த மக்களோ டொப்ப ஐயறிவுபடைத்த விலங்கினெழுக்கத்தை ஒரு தன்மை யுடைத்தாகக் கொள்ளுதலியலுமோ? மக்களுள்ளும் குற்றம் முற்றக்கடிந்து முதன்மையுற்ற வாழ்வினை யுடையார் எனையரேயுளர்? ஒரு சிலரேயன்றி? ஒரு தாய் வயிற்றுப் பிறந்தோர் பலருள்ளும் எத்துணையரே உடன் பிறந்தார் மாட்டு உள்ளன்புடையரா யுளர்? ஒரு தாய் வயிற்றிலுடன் பிறந்தோர் யாவரும் சகோதரர் மாட்டுப் பேரன்புடையராகி வாழ்தலை மேற்கொள்ளுவராயின், உலகெலாம் புகழும் உயர்குணப்பரதன் பெரிதும் உத்தமனுவது தானுண்டோ? உள்ளன்புடையோய்! உரைதரு மொழி யொன்றுகேள். உலகில் மெய்ம்மையுற்றார் ஒரு சிலரே. அதனுல் நட்பினராகப் பெற்றுரிடத்துளதாம் நற்குணங்களைப் பாராட்டிக் கொள்ளுதலன்றி, குற்றமே காணிலென்னும்? மக்களாய்ப் பிறந்தாருள் யாவரே நவை யற்றாரிவர் என்று சிறப்பித்தற்கு உயரிய நிலை பெற்றார்? ஒருவருமிலர். அதனுலன்றே 'குணநாடிக் குற்றமுநாடி அவற்றுள் மிகைநாடி மிக்ககொளல்' என நீ குறித்த அவ்வேதமும் விதித்தது. விதித்தாலேயும் அது கூறுவதென்னை? முதற்கண்குணன் என்பதன்றே? ஒத்து வாழ்வதற்காகிய நிலைதெரிவான் ஒருவன் தான் நட்கவிருக்கும் மற்றவன்பாலுள்ள குணங் குற்றங்களை யாராய்ந்து அவற்றுள் குணமிக்கிருப்பின் நட்க என்றும், குற்றமிக்கிருப்பின் நட்புச்செய்யாதொழிக வென்றுமல்லவோ விதிக்கின்றது. அம்முறையால் ஆராய்வோமெனினும் இச்சுக்கிரீவன் நம்பால் புறக்கணிக்கப்படுவதற்காகிய குற்றம் பெரிதுடையானல்லனே? அதனுல் இவன் நம் அன்பிற்குரியனுயினுன். நட்பினர்க்கு உற்றுழி

உதவாத வாழலும் ஒரு வாழ்வெனப்படுமோ? அதனால் இலங்கெழிற்றோளினாய்! நீ மனக்கவலாதேகொள். சுக்கிரீவன்பாலையுறு தொழில' என மொழிந்தனன்.

## உடன்பிறந்தோர் போர்செய்தல்.

அவ்வெல்லையில், 'தந்தோள்வலி மிக்கவர் தம்மொடு தாய்வயிற்றின் வந்தோர், மடமங்கைபொருட்டு மலைக்கலுற்றார். 'சிந்தோடரியொண்கண் திலோத்தமை காதல் செற்ற சுந்தோபசுந்தப் பெயர்த்தொல்லையினோரு மொத்தார்!'

'கடலொன்றினோடொன்று மலைக்கவும், காவன்மேருத் திடலொன்றினொடொன் றமர்செய்யவும் சீற்றமென்ப துடல் கொண்டிரண்டாகியுடற்றவும் கண்டிலேம். நேர்மிடலிங்கவர் வெந்தொழிற்கொப்புரை வேறுகாணேம்.'

## சுக்கிரீவன் தளர்ச்சி.

அன்ன தன்மையராய் தமது ஆற்றலைத் தோற்றுவித்து, அவ்விருவரும் அமர்புரிகின்ற காலையில் வலிய நெடிய விசாலமான திரண்ட புயத்தையுடைய அடுதிறல்வாலி அரியேறு மத வாரணத்தைப்பற்றி வதைப்பதுபோலச் சுக்கிரீவன் மிகவும் உலையுமாறு மலைந்தான்.

அவ்வாறு மலையவே ஆற்றாதவனாகி அற்றம் நோக்கி நழுவி விரைந்தோடி இராமனை யடுத்து 'வீர! இன்னும் ஒரு சிறிது அவன் கையகத் திருந்திருப்பேனாயின் என்னுயிர் அளிக்கயாராலாகும்? இங்ஙனம் நீ வாளாவிருந்ததூஉம் நியாயமேயோ?' என மனம் நொந்துரைக்க, இராமனும், 'ஆருயிர் நண்ப! உளங்கவலேல். நீவிர் இருவரும் ஒரு தன்மையராகிய உருவத்தினராயிருந்தமையின், வேறுபாடு காணமாட்டாதவ

னாய்த் தியங்கியதையன்றி, நின்னுயிர்க்கு ஊறுவிளையுமாறு எண்ணினேனல்லன். நான் கூறுவதைக்கேள். நும்மிருவரில் வேறுபாடு யான் எளிதின் அறியும்வண்ணம் ஓரடையாளங்கொண்டு சென்று போர்புரிவாயாக. அதுகாலை நின் முன்னவனையறிந்து என் கைவாளியால் அவன் உயிர் வாங்குவன். இது பிழைபடுவதன்று' என்று தேறுதல் சொல்லி கொடிப்பூமாலை யொன்றை அறிகுறியாக அணிந்து செல்லுமாறு பணித்தான். அவ்வாறே சுக்கிரீவனும்சென்று வாலியொடும் போர்புரியலானான்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

### வாலி மார்பில் இராமன் அம்புவிடுதல்.

பிடி நழுவப்பட்டமையா லோடிச்சென்று மீண்டும் பூமாலை யணிந்துவந்து போரைவிரும்பிய, தன் தம்பியின் கருத்துணர்கிலாத வாலி, இத்தருணம் இவனைவிட்டு விடலாகாது. இம்முறை தவறாது இவனுயிரை வாங்கிவிடவேண்டுமென்றுன்னி முன்னினும் முனைந்து மண்டமர் தொடங்கி இளவலைத் தரையோடு மோதிக்கொல்லக்கருதி அவனை இடுப்பினும், கழுத்தினும் கரங்களாற்பற்றி எற்றுதற்கு முற்பட்டான். அதுகண்டு சுக்கிரீவன் போக்கற்றுத்தவித்து இராமனிருக்கும் திசையை நோக்கினான். அந்த நோக்கினாற் குறையிரக்கின்றமை யுணர்ந்த இருகு வீரனும், இனிக்காலந் தாழ்ப்பேமாயின் நம் இன்னுயிர்த்துணைவனுக்குப் பெருங்கேடு விளையுமென்றறிந்து வரிவில் குழையத்தோளுற வாங்கி வெஞ்சரமொன்று தொடுத்து, வாலியின் வலியமைந்த உரத்தூடுருவிச் செல்லுமாறு தூர்ந்தான். இராமனுற்றெடுத்து

விடப்பட்ட பகழியானது பஞ்சபூதங்களின்போராற்றலை ஒரு சேரப்படைத்த வாலியின் மார்பைப்பிளந்துகொண்டு, காரும் வார்சுவைக் கதலியின் கனியினைக் கழியச், சேரும் சூசியிற் செல்வதாயிற்று. மார்பில் அம்புதைக்க வாலி தன் தம்பியைப்பற்றியிருந்த கைகள் தளரவிடுத்து நிலத்தைச் சார்வதானன்.

வாலி தளர்ந்து சாய்தல்.

அடல்வலி தளர்ந்து சாய்வுறுங்காலை தம்பியைப்பற்றியிருந்த கை நெகிழ்ந்தனனே யன்றி,மார்பிற்றைத்த அம்பை அப்புறம் போகவிடாதுபற்றி யகப்படுத்துவதில் கைநெகிழ்ந்தானில்லை. பெருவலிபடைத்த மார்பூடுருவிச் செல்லுறும் பகழியைப்பற்றி வாலினும் காலினும் பிணித்து அகப்படுத்தான். அவ்வரும்பெரும் செயலை ஆற்றல் சான்ற கொற்ற வெங்கொடு மறலியே வியந்து கொண்டாடினன். இராமனேவிய பகழியோ சொல்லொக்கும் கடியவேகச்சுடுசரம். அதனினும் முன்னர்த்தாடகையென்னும் கொடியாளது மார்பாகிய வயிரக்குன்றக்கல்லிற்றங்காது, அப்புறங்கழன்று கல்லாப்புல்லர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப்போன திறலமைந்தது. அத்தகைய வாளியானது தன் மார்பைப்பிளந்து அப்புறத்தகலுமுன் அகப்படுத்தான். அந்நிலைமையில் அவனை உண்மை வீராயினர் யாவரே வியவார்? அம்பு தைத்தமையாலும், அதனை யகப்படுத்த முயன்றமையாலும் மிக்க தளர்நிலையடைந்து நிலத்தே வீழ்ந்தனன். அந்தோ! மிக்க பரிதாபகரமான நிலைமை! விழுந்தவன் மலையென உருண்டனன், வெருண்டனன். நாணினன். முகங்கோணினன். பின்னர் அகப்படுத்திய அச்சுடுசரத்தைப்பற்றிப் பறிக்க முயன்றனன். முயன்றும் முடியாமையால் அயர்ந்து சோர்

வுற்றான். பறிக்கையாலாகிய அசைவாலுண்டான வேதனை தாங்கலாற்றாது துடித்தனன். தன்னை இந்நிலைக்காளாக்கிய அம்பை நோக்கினான். மூண்டுவிட்டது பெரும் சினம். அக் கோபத்தால் இப்பார் முழுவதையும் ஒரே அறையிற்பொடி படுத்துவிடுகின்றேன் என்றெழுந்திருப்பான். முடியாமை யாற் சோர்வுற்று விழுவான். புரண்டுருண்டு தன்னெடுந் துணைக்கர மோச்சித் தரையைத் தன் முழுவலிகொண்டும் எற்றுவான். ஆகா! அவ்வறை பெற்றகாலத்து ஆதிசேட னும் உடல்குலுங்கினான். அத்தளர் நிலையினும் அவனுக் கிருந்த ஆற்றல்தானென்னே! 'அம்மம்ம! சலியாத பெருவலி படைத்த என்மார்பிலழுந்துமாறு இச்சரந்தொடுத்தவன் யாவனோ?என்னெதிர்ப்படின் எள்ளாட்டி எண்ணெய்கொள் வதுபோல் அவன் உடலாட்டி உயிர்கொள்வன்' என்று நாற் புறமுஞ்சுற்றிநோக்குவான். ஆயினும் என்னாம்? ஒருவராவது அவன்கண்ணெதிர்ப்பட்டார்களில்லை. அதனால் வெடிமருந்தை யேற்ற வேங்கையையொப்பச்சீறியெழுந்து தள்ளாடி வீழ்ந் தான். 'நம்மீது அம்பெய்தவர் தேவராக இருத்தலும் கூடு மோ? என்றயிர்த்தான். அந்த ஐயமும் ஒரு நொடிப்பொழு தில் நீங்கிவிட்டது. 'தேவர்க்கு நம்மோடு வந்த பகையென் னுண்டு? ஒன்றுமில்லையே. பகையுடையரே யெனினும் நம் மார்பூடுருவிச்செல்லுமாறு அம்புதொடுக்கும் ஆற்றல் அவர் பாலில்லை. அதனால் அவரல்லர் நமக்குத் தீங்கிழைத்தோர்' என்று தேறுவான். தேவரின் மிக்க மூவரின் ஒருவனே இப்பகழி எவியிருத்தல் வேண்டும்! ஆயின் அவனுக்கு நம் மொடுவந்த முனிவென்னோ? என்று கருதுவான். 'அளவிலா ஆற்றல்படைத்த நம் வலிபோக்குமாறு அமைந்ததூஉம்ஒரு வாளியே போலும்? இது சாலவும் நன்று!' என்று ஓம்பினு

லழிவனை—யின்றமைக்கு நாணுட்கொண்டுநகைப்பான்.நகைத்துத்தனது பரந்தகன்ற மார்பை நோக்குவான். நோக்கவே அம்புதைத்திருப்பதனை யுணர்ந்து பொங்கியெழுஞ் சீற்றத்தனய் உருமதிரும்படியாகக் கர்ச்சிப்பான். இவ்வாருகப்பல வாறு வலியிழந்து துயருழந்த வாலி பின்னர் தன் முழுவலியினுலும் அவ்வம்பைப்பற்றிப் பறித்தெழுந்தனன். அவ்வாறவன் பகழி பறிக்கவே பரந்தகன்ற வாலியின் மார்பாகிய மலையினின்றும் கல்லென்னு மொலியுடன் இரத்த அருவி பெருக்கெடுத்துப் பாய்வதாயிற்று. அம்மம்ம! அப்பெருக்கினளவையும்,ஓசையின் தன்மையும் நம்மனோர் எடுத்தியம்பற்கியலாது.

## சுக்கிரீவனது சகோதரவாஞ்சை.

அருகில் நின்ற சுக்கிரீவன் தன் முன்னவன் மார்பினின்றும் வெளிப்போந்த அருவியனைய ஓசைச்சோரியை உற்று நோக்கினன். நோக்கவே அவனை யறியாதேயும் அவன் மன நெகிழ்ந்துவிட்டது. உடன் பிறப்பென்னும் பாசத்தாலிறுகப் பிணிப்புண்டனன். யாதொரு செயலுமின்றிப் பசுங்கண்கள் நேசத்தாரைகள் சொரிதர நெடுநிலந்தானும் சேர்ந்தயர்வுற்ருன். சகோதர வாஞ்சையின் வல்லமைதானென்னே! என்னே! அதுகாறும் தன் முன்னவனை மாற்ருனெனக்கருதி அவனுயிர் கவரப் புதிதொரு கூற்றைக் கொணர்ந்தவன். அறக்கொடியவன். தேறத்தகாதவன் என இலக்குவனுற் கருதப்படுமாறு கொடுவைரம் வாலிபால் கொண்டிருந்தமை இதுகாலை எங்கே போயது! அதன் உருவொழிந்தழிந்து போயிற்றன்றே! அக்கடும் பகையென்னும் மனமாசு நீங்கப்பெற்றமையாலன்றே தன்உள்ளன்பின்

மெய்மை தோன்ற நின்றனன். 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும்' என்னும் பொய்யாமொழி பொய்யாமொழியே யென்பதறிந்தேம் இச் சுக்கிரீவன் செயலால்! உலகிற்குயிரெனச் சிறந்த மன்னரினும் மிக்க மேம்பாடும் அழியா நல்லிசையும்பெற்ற எழுபெரு வள்ளல்களிறந்த பிற்றை ஞான்று பாணர்களையும், புலவர்களையும், அவர்தம் சுடும்பையும் இடும்பையினின்றும் காத்துப் பொருளும்,பதமும்உதவிவந்த தலைக்கொடையாளியாகிய குமணவள்ளலை அவன் இளையோனாகிய அமணன் என்பான்,பொருள்குறித்த பேதைமையால்காட்டிற்கனுப்பியதுமன்றிக் கொல்லுவதற்கும் முனைந்து குமணன் தலை கொணர்வார்க்குப் பரிசில் செம்பொன் கோடி தருவதாகப் பறையறைவித்துப் பின்னர் சிற்பியின் வேலைத்திறத்தால் குமணன் தலையொத்த பொய்த்தலையொன்றைப் புலவரொருவர் கொண்டுசென்று காண, அத்தலைகண்டு அவ்வறக்கொடியோனும் துடிதுடித்து மனமிரங்கித் தன் முன்னவனைக் காணவேண்டுமென விழைந்து புலவரடிபணிந்து கண்டனன் என்ப. அவ்வமணனே போல் பொறாமை, பொருளாசை என்னும் இவை காரணமாகத் தன் முன்னவனைப் பகைத்தானல்லன் இச்சுக்கிரீவன். அவனிடத்து ஆராக்காதலும், பயபக்தியும் உடையனாக இருந்திருக்கிறான். ஆயினும் வாலிவினிற் குற்றம்பல கற்பித்துக் கொல்ல முனைந்ததுமன்றி, மனைவியையும் கவர்ந்தமையால் அவ்வாலிபால் பகைமைக் குணம் சுக்கிரீவனிடத்துத் தோன்றியது என்றாலும் அவ னிறப்பதற்கு மனமொப்பவில்லை. ஆகவே சுக்கிரீவனைக் குறித்து நம்மனோர் போற்றுவதே யன்றி வேறியாது கூற வியலும்!

## வாலி பறித்த அம்பில் இராமன் பெயரைக்கண்டு அவன் குலத்திற்காக இரங்கல்.

இஃது ஒருபுறமிருக்க, வாலியோ தன் மார்பில் தைத்த பகழியைப்பறித்ததும் மூண்டெழுந்த பெருஞ் சினத்தால் முறித்தெறிந்திட முயன்றான். முயலுகையில் அவன் மனதில் வேறோரெண்ண முண்டாகியது. அதாவது இவ்வம்பை வம்பிவெய்து நம்மை யொறுத்தவன் யாவனோ அறிய வேண்டுமெனத் தெரியக்கருதியதே. அவ்வாறு கருதிய வாலி உடனே அவ்வம்பிற் பொறித்திருக்கும் 'இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராம னென்னும், செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களிற் றெரியக் கண்டான்'. அப்பெயரைக்கண்ட வாலி தானடைந்த துயரெலாம் மறந்து பிறிதொரு கவலையை மேற்கொண்டான். அந்தோ! வேத நூலிற்சொல்லப்பட்ட அறங்களில் மாறுபடாத ஒழுக்க நெறியினராகிய அரசர்பலர் சூரிய குலத்தில் தோன்றி, உலகெலாம் ஒரு திகிரியுருட்டி, ஆண்டு ஓங்குபுகழ் நிறீஇயினர். அவ்வேந்தர் குலத்துக்கு, வில்லறந்துறந்த வீரன் ஒருவன் தோன்றலால், ஒரு பெருங் குறை நேர்ந்துவிட்டதே! உயர்குலத்துதித்த பெரியோர்போலன்றி இழிந்தோர் இயல்பினனாகி, என்பால் முறைதிறம் பினன். அதனால் தன் குலத்துக்கு என்றும் அழியாப்பழி தேடிக் கொடுத்தனனே! பாவம்! அவ்வுயர் குலத்துக்கிருந்த கெடுகாலம் ஈதாயிருந்ததே! வருந்தத்தக்கது!'' என்று மனத் துட்கொண்டு நாணமுற்றுத் தலைகுனிந்து வெடிபடச் சிரித் துத் தளர்வடைந்து பலவாறாக எண்ணமிட்டு,மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்.

## இராமன் வாலியை அணுகுதலும், வாலி இராமனை ஏசுதலும்.

அதுகாலை இராமன் மெல்ல வாலியை அணுகிவந்தனன். நீலக் கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்று வரி வில்லேந்தி வருவதேபோலும் இராமனைக்கண்ணுற்றான் வாலி. காணவே ஆற்றொணுக்கோபம் அகத்தெழ, இடியேறும் நிலைகுலையும் படி உரத்தகுரலோடு ஏசுவான் இப்பதனுற்றான்.

'வாய்மை கெடாதிருத்தற் பொருட்டும், மரபுமுறை வழாதிருத்தற் பொருட்டும் தான் முன்னீந்த அவ்வரங்களைக் கொடுத்தற்கரிதென மாற்றுனுகி, உடன்கொடுத்து உயிர்விடுத்துப் புகழ்படைத்த தசரதனுக்குத் தலைமகனுகவும், முந்தையோர் முறையினின்றும் முழுதுலகளித்த தந்தை வழுவினனுகையால், அதனை நீக்க மன்னனைக்கொணர்ந்து, அவற்கு அரசளிப்பதையன்றி, யானேற்றுப்பிழைபடேன்எனச் சூளுறவுகொண்டு நின்னையுற்றிரந்தழைத்தும் பயன்படாமையால் பாதுகையேற்றுச்சென்று, அயலிலுள்ள நந்திபங்கிராமத்தில் நின் பாதுகையை அரசாக்கித் தான் ஏவலாளாயிருந்து வாழும் உத்தமப் பெருங்குணத்தேந்தலாகிய பரதனுக்கு மூத்த தமையனுகவும் தோன்றினுயே? நீ தோன்றலையாயின் அன்றே அவர்புகழ் அழியாதோங்கும்? அவர்க்குப்பெரும்பழியுண்டுபண்ணிக்கொடுக்கவோ நீ உலகத்துத்தோன்றினுய்? ஓ ஓ கொடிதோ! கொடிது! அவர் செயலை மனமாரப் புகழ்வார் புகழ்ச் சிலரும் பலரும் யாது புகல்வர்? கொடுஞ்செயல் புரிந்த இராமனது தந்தையன்றோ தசரதன் என்பான்? அக்கொடிய இராமனது தம்பியன்றோ இப்பரதன் என்பான்? எனவும் உரைப்பாரன்றே? சீதேவிதோன்றிய திருப்பாற்கடலிலே

மூதேவி என் பிறந்தாள் முன்னெனப்ப. அதுவேபோல் குற்ற மில் குணத்தாசாகிய பாதனுக்கு முன்னவனுக நீ தோன்றி யதூஉம் மிக வருந்தத்தக்கதே! வாய்மையும் மாபும் கருதிய தந்தையின்கட்டளையை நிறைவேற்றும்பொருட்டு நீ காடுபோந் தனையாயினும், நின் உள்ளக்கருத்துத் தந்தையின் வாய்மை நிலைபெறவேண்டுமென்பதொன்றன்றே? அங்ஙனமாகவும்பஞ் சமாபாதகத்திலொன்ருகிய வஞ்சகக்கொலையை நீயேன் செய் தாய்? அறியாமையாலேயோ? அங்ஙனம் கொள்ளுதற்கியலா தே? ஏனெனில், ‘குலவித்தை கல்லாமற் பாகம்படும்’ என்பவா கலின் உங்கள் உடைமைபாகிய கோவியற்றருமங்களி லுனக்கு அறிவில்லையென யாவரே சொல்லுவர்? நீதியெல்லாம் அறிந்து வைத்தும் இவ்வடாத செயல் புரிந்தனையே! இதற்குக்காரணந் தான் யாதுகொல்? ஓங்குபுகழ்ப்பாதனுடைய சகோதா வாஞ்சையை நன்குணர்ந்தநீதானே எம்பியும்யானும் எதிர்ந்த போரில் அம்பிடை தொடுத்து, ஒருவரினின்று மற்றவரைப் பிரிக்க நின்றனை? இதுவுனக்குத்தகுமா? இச்செயலால் புகழ் மிகுமா? நலம் வருமா? பலன் தருமா? உடன் பிறந்தாராகிய நீவிர்பொருவது நீதியன்ருகையால் இவ்வாறு பிரித்தேனென் பாய் போலும்? அங்ஙனமாயின் இருவர் போர்செய்யுங்காலை இருவரும் நல்லுற்ருரேயன்ருே நடுநின்ருர்க்கு? அம்முறை யறியாது ஒருவன்மேல் கருணைகொண்டு மற்ருெருவன்மேல் வரிசிலை குழைப வாங்கி வாயம்பு மருமத்தெய்தல் தருமந் தானே? சத்கருமந்தானே? ஆராய்ந்து சொல் அப்பனே! குற்ற மிக்குடைய கொடியோயாகலின் நின்னைத்தண்டஞ்செய்தேன் என்பாய் போலும்? நன்று. குற்றமுள்ள கொடியாரை வேந் தொறுத்தல் பைங்கூழ் களை கட்டதனெடு நேராகும்! ஆயினும் தீர விசாரியாமல் தன் மனம் போனவாறே முடிவுசெய்து

தண்டமளித்தல் முறைமையாகுமோ? தக்காங்கு நாடி உண்மையறிந்து ஒத்தாங்கு ஒறுப்பதன்றோ வேந்தர் கடமையாகும்? அவ்வாறு ஒறுக்குங் காலையும் 'கடிதோச்சி மெல்ல எறிக' என்பதல்லவோ விதியாய் நின்று கடுமையை விலக்குகின்றது? என்பால் எப்பிழை கண்டாய் அப்பா? பிழைமிகச்செய்யும் கொடியனேயாயினும் யான் என் நாட்டிலிருந்து வாழ்கின்றே னன்றி, நின் நாட்டின் எல்லைப்புறத்திலிருந்து வாழ்கின்றே னல்லன். அதனால் நின்மண்ணினுக்கு என்னுடல் பாரமன்று. பகைமையாகிலும் உளதாகுமோ? அதுவுமில்லை. என் நண்பனைப்பகைத்தவன் என்னைப்பகைத்தவன் அல்லனோ என்பாய்போலும்? அங்ஙனமாயின் எம்மிருவருக்கும் பகையேற்பட்டதன் காரணத்தை நீயறியாயாதல்வேண்டும். நீ நட்புச்செய்திருக்கும் சுக்கிரீவனிடத்தில் யாதொரு பிழையுமில்லையென்று தேர்ந்துவிட்டனை போலும்? அவன்பால் நீ பிழைகண்டிலையெனின் என்பால் நீ எவ்வகையால் பிழைகண்டனையோ அறிகிலேன்? அவனிடத்தாருச்சீற்றங் கொண்டொழுக்க நின்றதூஉம் பெரும்பிழை அவன் செய்துள்ளமைகருதியே யன்றோ? இவை நிற்க. இன்று வலிய வந்து போருக்கு அழைத்தோன் அவனேயாக என்பாற்பட்ட பிழைதான் யாதோ? நின்னிளவலாகிய சுக்கிரீவன் எனக்கு உதவிபுரிவதாக உறுதி கூறியுளனாகையால், அவனுக்கு உதவியாய் நின்றேனென்பாய் போலும்? அதுவாயின், அவன் நினக்குச் செயலாகும் உதவியாதாகும்? பேதைமைப்புத்தி நின்னையும் உற்றதற்காக நகுவேனோ? அன்றேல் ஆவிபோன்றவளும் அமிர்தமொத்தவளுமாகிய தேவியைப்பிரிந்த துயரால் சிந்தை திகைத்தயர்வது கண்டு மனமிரங்குவேனோ? மதிமாண்டவீர! மதவாரணத்தைப்பற்றிக் குலைக்க வாளரிவையத்துணைக்

கோடலழகிதோ? வலியிலாக்குறுமுயலைத் துணைக்கோடலழ கிதோ? நீயேசொல்? இவையெல்லாம் ஒருபுறமாக, நினக்குத் தீங்கிழைத்தவன் இராவணனன்றே? அவ்விராவணனே அரக்கர்குலாதிபன். அவன் செய்த தீங்கையுன்னி மனங்கொதித் தனைபோலும்? உங்கள் குலத்தாதித்தோன்றலாகிய மநு அருளிய நீதி நூலிலே அரக்கர் ஒருவர் ஒழிவுசெய்து கழிவரேல் அதற்கு வேறோர் குரக்கினத்தரசைக் கொல்லவேண்டுமென விதிகூறப்பெற்றுளதோ? அதுபற்றித்தான் என்னுரைத்தூடுருவிச்செல்லுமாறு பகழி துரந்தனையோ? அல்லது நீ பெருங் கருணை வள்ளலாகையால், அக்கருணைத் திறத்தால், வானத்து விளங்கும் வெண்மதிக்குத் தொன்றுதொட்டே களங்கமியன் றுளது. இரவிக்கோ அஃதிலது. ஆகலின் நாம் சூரிய குலத்திற்கோர்களங்கம் உண்டுபண்ணிக்கொடுப்போம் என்று கருதி, ஆரியனாகிய நீ இக்கொடுஞ்செயலைப் புரிந்தனையோ? அல்லது வலிமைமிக்க வாலியைக்கொன்ற மகாவீரனென உலகினர் உயர்த்துக்கூறும் பெரும்புகழ் பெறுவோமென்னும் அவாவினாற் செய்தனையோ? அங்ஙனம் சத்தியத்தொடுபட்ட அரசநீதியைப்பொருந்திப் போரில் என்னையெதிர்த்து வெற்றி பெற்றனையாயினன்றே நீ போற்றப்படுவாய்? வஞ்சகத்தினால் மான்பிடிக்கும் வேடரேபோல் மறைந்து நின்று கொன்றனையே? உன்னையோ உலகினர் புகழ்வர்? அல்லர். ஆண்மையில்லாத பேடியெனவும், வஞ்சப்போர்செய்யும் நெஞ்சத்தரக்கரிற் கொடியோனெனவும், பெரும்பொய்யாளனெனவும் பழித் துரைப்பர். வசிட்ட மகா முனிவரிடத்து ஞான நூல்களைக் கற்றனை என்று உன்னைச்சொல்லுவர். அவர் உனக்குக்கற்றுக் கொடுத்த ஞான நூல்கள் இத்தன்மையான கொடுஞ்செயலையோ ஆதரிக்கின்றன? எண்ணிலா அருந்தவத்துக்கோசிக

னிடத்து வில்வித்தை பயின்றனை யென்ப நின்னை! அப்படிக் கற்றநூலும் ஒளிமறைவினின்று முன்னெச்சரிக்கை யில்லாதவனும், நிராயுதனுமாகிய ஒருவனுடைய மார்பினெய்வதற்கென்றுதானோ? ஐயோ! நின்னிழிவினையால் குலத்தார்க்கு மட்டுமேயல்ல, ஆசிரியன்மாருக்கும் பழிகொண்டுவிட்டாயே! பேதாய்! நின்பெண்டாட்டியைக்கொண்டகன்றோன் மற்றொருவனாக அவனைச் சேறமாட்டாத எளியனுப்தவித்து ஆயரும் நீ வாலியைப்படுத்ததனுற் பெற்றபலன் யாதாகும்? வாலியைக் கொன்றதாக எண்ணி மனமகிழவேண்டா. நிலைபெற்றதாகிய தருமவேலியை யறக்களைந்தெறிந்தனையாதி. நின்னொரு கொடுஞ்செயலால் தருமம் என்பது நிலைபெறுமாறில்லையாயிற்று. உயர்குலத்துப்பிறந்த நீயே இக்கொடுவினை இயற்றமுற்பட்டனையாயின் இயல்பாகவே கொடுந்தொழிலியற்றும் அரக்கர்கள் எவ்வாறு நல்வினை விழைந்தியற்றுவோராவர்? அவரைத் தீவினையாளரெனச் சினந்தொறுப்பதற்கு உனக்கு இனி ஞாயமுளதேயோ? இராவணன் இழைத்தது மாயப் புன்றொழிலாமென அவனைக்கோபிக்க இடந்தானுனக்கு உளதோ? நீ இயற்றிய இச்செயல் அதனை யொத்ததன்றோ? புன்றொழிற் குரங்கொடு நட்புக்கொண்டு வன்றொழில் அரக்கரை யழிக்க நின்ற வீரசிங்கமே! நீ ஆதிமுதலே பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் துயரளித்தவனன்றோ?

'பெற்ற தாதை பூட்டிய செல்வமாங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து நாட்டொரு கருமம் செய்தாய், எம்பிக் கிவ் வரசைநல்கிக் காட்டொரு கருமஞ்செய்தாய். கருமந்தான் இதன் மேலுண்டோ?' நீ செய்யும் கருமங்கள் நின் சொல்லொடும் மாறுபட்டவையாக உள. 'தாழிருஞ் சடைகள்

தாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு, பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி, ஏழிரண் டாண்டில் வாவென் றியம்பிய, அரசன் கட்டளைக்கு விரோதமாக உயிர்க் கொலை புரிந்து வாழ்தலை மேற்கொண்டனையே! சால அழகிது. தலை நிமிர்ந்து நிற்பதற்கும் நின்மனம் துணிகின்றதே? என்னுயிரொளித்துண்ட நீ இற்றையிற் பிறர்க்கும் இகலே றென யான் வீழ்ந்து கிடக்கும் இந்நிலத்தருகே நிற்றியோ? என்னெதிர்ப்பட்டுப் போரெதிர்ந்திருப்பையேயாயின் நின் ஏக் கழுத்தம் இவ்வளவினதென உலகினர் அறியக் காண்பித் திருப்பேன்' என்று பற்களை நெறநெறவெனக்கறித்து கடு கடுத்துப் பேசி ஏசினன்.

### இராமன் இறுத்த விடை.

அவையெல்லாம் அமைவொடு கேட்டுநின்ற இரகுவீரன் வாலியைப் பரிந்துநோக்கிக் கீழ்வருவனவற்றை விடையாக இறுத்தான்.

'அப்பா வாலி! என்மொழி சற்றே கேள். நீ பிலம்புக்க பின்னர் நெடுநாளாகியு மீண்டாயல்லை. அதுகண்டு நீ இறந்த தாகக் கருதித் தானும் உயிர் துறக்க நேர்ந்தான் சுக்கிரீவன். அதுகண்டு நின்குலத்து முதிர்ந்த அறிவும், உயர்ந்த குலமு முடைய சான்றோர் தடைசெய்து ஞாயங்கள் கூறி யரசளிக்க ஏற்றுக்கொண்டனன். பின்னர் வந்த உன்னை வணங்கி மகிழ்ந்தனன். அதுவேயன்றி நின்னரசினைத் தானேற்ற கார ணமும் கூறி மன்னிப்பும் வேண்டி நின்பாற்கொடுக்கவும் கொல்லுதற்கு முயன்றனை. சோதர அவனுக்கின்மை தெரிந்தும் மனமிரங்கினைபல்லை. என்னைக்கொல்ல வேண்டா? எளியேன் உன்னபயம் காத்தருள் புரிவாய்! பிழைபொறுத்தருள் என் றிரங்கித் தஞ்சம் புகவும் அருளாது கொல்வதற்கே முற்பட்

டாய்! அவன் நாற்றிசையிலும் ஓடியொளிய நின்றமைகண்டும் மனமிரங்கலை உடன் பிறந்தானென்றாகிலும் பேணினையல்லை. மதங்க முனிவரது ஆச்சிரமத்தையடுத்த மலைக்கு அவன் ஓடிவே சாபத்தடை பொன்றிருப்பதால் பங்கம் நேரிடுமென் றெண்ணித் தொடராது விடுத்தனை. இல்லையேல் அவன்கதி அதோகதியே யாமன்றோ? இது வொருபுறமிருக்க,

> 'ஈர மாவதும் இற்பிறப் பாவதும்
> வீர மாவதும் கல்வியின் மெய்ந்நெறி
> வார மாவதும் மற்றொரு வன்புணர்
> தார மாவது தாங்கும் தருக்கு அன்றோ'?

அங்ஙனமாகலின், நீ அருமைத் தம்பியின்ஆருயிரை வௌவக் கருதினதே பிழையாயிருக்க, மற்றவன் ஆருயிரனைய தேவியை வௌவியது பெரும் பிழையாமன்றோ? அஃதுளத்துணை அறக் கொடிய செயல் என்பதோர்ந்திலைபோலும்! அக்கொடுமை யுடையையாதலாலும், சுக்கிரீவன் என் உயிர்த்தோழனாதா லும், எதிலாரையும் எளியரென்றாரையும் தீது தீர்ப்பதென் னிந்தைக் கருத்தாதலாலும் இவ்வாறு செய்தேனேயன்றி மற்றில்லை எனத்தேர்' என்றனன்.

பேரெழில் தழைத்த வீரன் பிழைத்த தன்மையிதுவென வுரைசெய, வாலியும் அவனை நோக்கி, 'ஐய! நன்று கூறினை! சுக்கிரீவன் உயிர்த்துணையான உரிமையையான் கவர்ந்ததொன் றே என்பாற் கண்ட பெரும் பிழையென நீ கொண்டனையா யின், யான் மொழியும் இஃதொன்றனையுங்கேள்! மனுவின் வழிவந்த மன்ன! மலைபகத்தும் காட்டகத்தும் வாழ்கின்ற இயல்பினராகிய எமக்கு உணர்வு சென்றுழிச்செல்லுமொழுக் கமே சாலச்சிறந்ததல்லால் மறைபொழுக்கத்தொடு பொருந்

தியமணமுமில்லை. குலமுதற்கொத்த குணமுமில்லையென்ப தறிதி. என்னைகொலோவென வினவுதியேற் கூறுவன். தேமலர் மேலவன் அவ்வொழுக்க நெறியை விலங்கினத் தாராய எமக்கு விதித்திலன் கண்டாய். ஆகவே எமக்கு வேறு எவ்வகை ஒழுக்கமுமின்று. எனினும் அவ்வப்பொழுதிற் பெறுமவற்றையே கொள்ளுமாறு விதித்துளன். ஆகலின் அம்முறைமை பற்றி என்செயல் பிழைபடுமா றில்லையென லாமன்றே. அறிவுடை ஐய! அங்ஙனமாயின் என்பாற் கண்ட பிழைதான் யாதோ? கூறுதி'' என்றனன்.

## இராமன் கூறிய மறுமொழி.

எனவே, இராமனும் வாலியை நோக்கி, "நீ பகர்ந்த மொழியால் பிழைபட்டனை. ஐய! நின்னைக் கேவலம் விலங் கினத்தொடு சேர்த்துக்கொள்வதனுல் குற்றமற்ற பெற்றி யுற்றிடுவதாகுமோ? 'செங்நெலாலாய செழுமுளை மீண்டுமச் செங்நெலேயாகி விளைதலால், மகனறிவு தந்தையறிவு' என்ப. நீயோ இந்திரனருளிய புதல்வன். ஆதலின் நலங்கொள் தேவரிற்றோன்றினுயாகி. மேலும் காலன் ஆற்றல் கடிந்த கண்ணுதற்கடவுள்பால் இடையறுப்பேரன்பு பூண்டொழு கும் அருமையுடையாய். அவனருளால் ஆற்றரு வன்பெரும் பூதங்கள் நான்கின் ஆற்றலும் ஒருசேரப்படைத்தனை. விலங் கெனக்கூறிக்கொள்கின்ற நீ, என்னை வினயவற்றுலும் நின் சார்பாகக்கூறிய, 'மணமுமில்லை மறைநெறி வந்தன குணமு மில்லை குலமுதற்கொத்தன' என்பவற்றுலும் விலங்கலாமை வெளிப்படுத்தி வேத ஒழுக்கத்தையும், மறு நீதியையும் பிழைபறவுணர்ந்த பேரறிவையும்,புலப்படுத்தினையாமன்றே? வீர! நாம் வலியமாயிருப்பது கருதி எளியாரைச் சினந்து

ஒறுத்தல் தருமோ? கற்பவை கற்றுணர்ந்தும் பயனென்னை யோ? அதற்குத்தக நிற்பதொழிந்த காலத்தே. அறத்தாறு தான் நிலைபெறுவதூஉம் பொறியின் யாக்கையது சார்பாலே யோ அன்றி அறிவின் சார்பாலேயோ? கூறுவாயாக. விலங் கிற்கும் மக்களுக்குமுள்ள வேறுபாடுதான் எவ்வளவிற்று யுளது? அறிவினளவினதாயன்றே? நன்றுதீது என்று வினை களின் இயல்பைத்தெரியும் நல்லறிவின்றி வாழ்வதன்றோ விலங்கின் நெறியாகும். மக்கள் நெறியோ அன்னதன்றால். மற்று நன்மை தீமையறிந்து ஒழுகும்பெற்றியதாகும். செய் தக்க இவை, தகாதன இவை யெனப்பகுத்தறிந்து ஒழுகல ராயின், மக்களும் வடிவால் மக்களேயாயினும்,ஒழுகலாற்றால் விலங்கேயெனும் தகுதியினராவரன்றோ? விலங்கேயாயி னும் மறுவின் நெறிபுக்கவேல், அவை *புலவரோ எனப்போற் றப்படும் தகுதியினவன்றோ? சிறியோய்! பிடியாயிரஞ் சூழத் தடத்தில் நீராடுகையில், கால்பற்றி இடங்கர் வலித்திட, ஓராயிரமாண்டளவும் போராடி, பயனின்மைகண்டு கோடுபற் றிய கொற்றவனைக்கூவி, அத்துன்பத்தின் விடுபெற்றுப்பின் னர், பிறவியில்லையாக வீடுபெற்ற கஜேந்திரனையும் ஓர் விலங் கென மதித்திபோலும்? அதுநிற்க. யாங்காணநின்ற எருவை வேந்தனை, எங்களாருயிர்த்தந்தையை யெடுத்துக்கொள் வோம்.

யாருமில் சமயத்து அற்றம்பார்த்துப் பைந்தொடியைக் கவர்ந்த இராவணனைக்கண்டு தடுத்து நன்மதிகூறியும், அவன் கேளாமையால் போராடியும், உண்மை வீரனிலும் சிறக்க உயிர்நிலைகூறியும், பின்னர், பெண்ணைக்காத்தற்பொருட்டு

*புலவர்-சிலேடைப்பொருளில் வந்தது.

உயிர்கொடுத்தும் பெரும்பதமெய்திய சடாயுப்பெருமானை யும் பறவையெனக்கழித்தொதுக்குதியோ? இது நிற்க. தக்க வும் தக்கிலாதவும் உன்னலராகி, ஏனையர் தேவரும் மக்களும் இழிநிலையடைந்தனரென்பதனைக் கூறப்புகின், அதற்கொரு வரம்பும் உண்டோ? ஆதலால் உலகத்துயிர்கட்கெல்லாம் மேன்மையும் கீழ்மையும் வினையினால்வரும் என்பதே மேலோர் துணிபு. எனவே, அனைத்து நன்னெறியும் ஆய்ந் துணர்ந்த நீ, நின் இளவல் மனையின் மாட்சியை யழித்த பிழையைக்கருதி, ஒறுப்பான் நின்றேனெனவறிதி! என் றனன்.

## வாலிமீட்டும் வினவல்.

அவ்வுரையமையக்கேட்ட வாலி இராமனை நோக்கி, 'செவ்வியோய்! அற்றேலஃதாக. என்னைச்செருக்களத்துருத் தெய்யாமல், முறைகோடி, கிராதரொப்ப, மறைந்து நின்று, அம்புதொடுத்து, உயிர்பருகியதென்னையோ?' என்றான்.

## அதற்கு இலக்குவன் கூறிய சமாதானம்.

எனலும், இராமன் இதற்கு யாதுபுகல்வதெனத்திகைத் தானாக, அருகில் நின்று யாவையும் கேட்ட இலக்குவன்,

'முன்புநின் தம்பி வந்து சரண்புக முறையி லோயைத்
தென்புலத் துய்ப்ப னென்று செப்பினன் செருவில் நீயும்
அன்பினை யுயிருக் காகி அடைக்கலம் யானும் என்றி
என்பது கருதி யண்ணன் மறைந்துநின் றெய்த தென்றான்.'

## வாலி மனந்தெளிந்து இராமனைத் துதித்தல்.

வாலி இலக்குவனுரைத்த மாற்றத்தைக்கேட்டான். சிந் தித்தான். அதுவும் நியாயமாகவே யுளதெனத்தேர்ந்தான். பின்னர், இராமன் அறத்திறன் நிலைபெறத்தோன்றினவனாத

லின், அதனை யழியச்செய்யானெனத் தெளிந்தான். கொண்டிருந்த சினமெல்லாம் ஒருங்கேபோக்கினன். கலங்கனிந்த நெஞ்சினனுயினன். இராகுவீரனை யிறைஞ்சினன். சில கூறுவானுயினன். "அறத்தாற்றில் நின்ற ஐயனே! எவிய கூர்மை மிக்க வாளியால் எய்து நாயடியனேன் ஆவிபோம்வேளையில் மெய்யுணர்வு தந்து அருளினுய். அறத்திற்கும், அகிலத்துயிர்கட்கும், அமரர்க்கும், அவரின் மிக்க மூவர்க்கும் முதல்வன் நீ என்பதனை யறிந்தனன்.

'புரமெலாம் எரிசெய்தோன் முதலினோர் பொருவிலா
வரமெலாம் உருவியென் வசையிலா வலிமைசால்
உரமெலாம் உருவியென் உயிரெலாம் நுகருநின்
சரமலால் பிறிதும்வே றுளதரோ தருமமே'

இல்லை! இல்லை! உண்டெனப்படுவதாகிய தருமத்தையே உருவமாகவுடைய நின்னைக்கண்டு கொண்டேன். இனி யான் காணக்கடவதொன்றுளதாகுமோ? அன்று! அன்று!. அன்று கொண்டு இன்றுகாறும் அடியனேன் செய்துள்ள பழவினையின் தண்டமே எளியனேற்கு உறுபதம் தருவதாயிற்று. நன்று! நன்று! அதுவும் நின்னருட் பெரு நோக்காலன்றோ? ஆரிய! நாயிற்கடைப்பட்டயான் மொழிந்த புன்மொழிகளை மனத்துட் கொள்ளேல். ஏழையேன் இழைத்துள தீயன பொறுத்தி. கொற்றவ! என்னைக்கொல்வதற்கு நின்னையழைத்து வந்தும் இளையோனுகிய சுக்கிரீவன் வெற்றரசே யெய்திப் பேதைமைப் பட்டான். என்னைகொலோ எனின் ஏழையேற்குக் கனவிலும்கிட்டாத விட்டரசையளித்தனனன்றே? இதனிற்சிறந்த பேருதவி மற்றுண்டோ? பகைமேற்கொண்டவன் போல நடித்துப் பண்புமிக்க நண்புகொண்டு ஒழுகியோனே யாவன் என் இளவல், எம்பிரை யீங்குப்பெற்றேன்

என் எனக்கரியது? இதற்குக் கைமாறு எவ்வகையால் யாவனுக்குச் செய்ய வியலும்? 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரி' தன்றே? காலத்தினாலுதவி தந்த இளவலுக்குக் கைமாறு செய்வதற்கில்லையே என என் மனங்கவல்கின்றது. புண்ணியம் புரக்கும் புனிதமூர்த்தி! நின்பொன்னார் திருவடிக்கொன்றுண்டு விண்ணப்பம். குரங்கினத்தவராகிய எமக்கு நறவமார்தும் பெற்றியொன்றுளது. எம்பி சுக்கிரீவன் அவ்வாற்றான் நறவமார்ந்திப்புந்தி வேறுற்றபோது மெய்யறியாமையால் தீவினையியற்ற நேரும். அறத்தின் நிலயமாகிய உங்கள்பால் அவன் அவ்வாறு செய்வானல்லன். எனினும் விதிவழி மதியோட அவ்வண்ணம் செய்துவிடுவானேயாயின், அதற்காக வெகுண்டு என்மேல் ஏவிய பகழிஎன்னும் கூற்றினை யவன்மீது ஏவா தொழிதல் வேண்டும். இவ்வரம் எனக்களித்தி இராகவ! என்னுயிர்க்கு உறுதி தந்த இளவலுக்கு இச்சிறியவுதவியேனும் யான்செய்யா தொழியின் அது நகத்தக்கதுடைத்து. இனி மற்றொன்றும் வேண்டுவல். நீயெண்ணிய எண்ணமெலாம் இனிது முற்றியபின், அயோத்திமாநகர் மீண்டகாலை உம்பிமார் எம்பியைநோக்கி, தன் முன்னைக்கொல்வித்த தகவிலான் என இகழாதவாறுபோற்றுதி. என்னையோவெனின்? எம்பி என்னைக்கொன்றானல்லன். பின்னையென் செய்தான்? எனக்கு வீட்டரசு உதவினனன்றே? மேலும் இவன் குறை முடிப்பதாக முன்னரே நீயும் மொழிந்துளாயல்லவோ? இதற்கு மேலும் யான்மொழிவது என்னுளது? ஒன்றுமில்லை. எனினும் வஞ்சத்தால் நினக்குத்தீங்கிழைத்த மாயவரக்கனை வாலிற்பற்றி நின்பால்தந்து, எனது புல்லிய குரக்கியற்றொழிலும் இத்தன்மைத்தென நீயறியக்காட்டு

நற்றுப்பாக்கியம் பெற்றிலேனாயினேன். இனிக் கடந்தவை நினைந்து கவல்வதனாற் பயனென்னுண்டாம்? எந்தாய்! எம் மினத்தவர் ஈண்டுளாரன்றே? இவருள் நினக்குற்றது செயற்கு உரியன் இவ்வனுமனே காண். கலைக்கடல்கடந்த காட்சியான். மூவரின் மிக்க மொய்ம்பினான். கோதறக்கொண்ட கொள் கையான். தீது நீங்கிய சீர்த்தியான். நான்முறை மிக்க நோன்பினான். மந்திரம் தக்க மாண்பினான். வாய்மையைப் போற்றும் தூய்மையான். ஆள்வினைக்கேற்ற ஆண்மையான். தோள்வலி சான்ற மேன்மையான். தருமத்தைத் தாங்கும் கருமத்தான். குன்றெனத்தக்க குணத்தினான். நன்றெனத் தக்க மனத்தினான். இவனது அரும் பெருங்குணச் சிறப்பு களை முற்றக்கூறி முடிக்க ஏழையென்னாலியலாது. சுருங் கக்கூறுமிடத்து, அறந்தெரி திகிரி செலுத்தும் ஐய! இவனை நின் செய்ய செங்கைத்தனுவென நினைத்தி. மற்றென் தம் பியை நின் தம்பியாக நினைத்தி. ஈண்டுநிற்கும் மற்றுளார் போல் சிறந்த துணையாவார் நினக்கு யாண்டு முளராகமாட் டார். இவர்கள் யாவருடனும் நண்பு கொண்டாடி, அவ் வனிதையைத் தேடிக்கொள்வாயாக!'' என்றுமொழிந்தான்.

## வாலி தம்பிக்குக் கூறிய நன்மதி.

பின்னர், அருகில் நின்ற இளவலை, துணைக்கை நீட்டி வாங்கித் தழுவி, 'தம்பி சுக்கிரீவ! உளங்கவலுதல் ஒழி. யான் கூறும் உறுதிமொழிகளைக் கொள்ளுதி. வேதங்களும் அவற்றின் துறைகளும், முனிவர்களும், மலர்மிசையயனும் ஐயந்திரிபற அளவைகளால் ஆராய்ந்து துணியும் முழுமுதற் பொருளே இவ்வுலகத்தில் இராமனென்னும் பெயர்கொண்டு அறநெறி நிறுத்திய வந்ததெனத் தெளிதி. அழியாத வீட்

டின்பத்தை வேண்டி, நல்லற நெறியில் நிற்கும் உயிர்களெல்லாம், இடையறாமற் சிந்திப்பதும், துதிப்பதும் இவனையும் இவன் நாமத்தையுமே யெனத்தேறுதி. மதியுடையோய்! இவ்வுண்மைக்குவகு மற்றொன்றும் வேண்டா. கைதவமே யியற்றி, யாண்டும் கணக்கில்லாத் தீமைகளே வைகலும் புரிந்துவாழும், இயல்புடைய என்னைப்பாரும் வள்ளல் ஏவிய பகழியால் வீயுங்காலை, தனிமாதவ முடையார்க்கும் கிட்டுதலரிய வானுயர் நிலையைப் பெறுவராமெனின், இணையடி இறைஞ்சி ஏவல்செய்தவர் சிறப்பு இத்தகையதெனச் செப்பலாம் தரத்ததோ? நின் நல்வினைப் பயனிருந்தபடியால் இவ்வையனை யெளிதில் நண்பனாகப் பெறும்பேறு பெற்றாய். அதனால் இருமையும் பெற்றனையாதி. இனிநீ, செயற்பாலது தான் யாதோ வெனின், திருமறு மார்பன் ஏவல் சென்னியிற்சேர்த்து, சிந்தையை யொரு வழிப்படுத்தி யுய்வதற்காகியநல்லொழுக்கத் தனுதலேயாம். நறவமாந்தி மதத்துத்திரியும் குரக்குச்செய்கையைப்பொச்சாப்பொடும் இல்லையாக மாற்றுதி. வள்ளல் செய்த பேருதவியை எஞ்ஞான்றும் மறவாதொழுகுதி. உற்றுழி ஐயனுக்கு நின்னரும்பெற லாவியைக் கைம்மாறாக உதவுதி. உறுபொருளெனக்கிடைத்த வாசினைப்பாச மெனவஞ்சிப்போற்றுதி. அஃதொழித்து நிறைபெருஞ் செல்வமென வுளம்பூரித்து மதிமயங்கி ஐயனை யிகழ்தலைக் காத்தி. இகழ்ந்தனையாயின் நின் பெருவாழ்வெல்லா மன்றே கெடுமென அறிதி. அழிவிலா ஆற்றல் படைத்த யான் வீழ்ந்து கிடப்பதும் யாராலென்பதனை யுள்ளத்தா லோர்தி. அன்றியும் 'ஆன்முலையறுத்த அறனிலோர்க்கும், மாணிழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும், பார்ப்பார்த் தப்பிய கொடுமை

யோர்க்கும்' உய்தியுண்டாதலுங் கூடும் ஒருவர் செய்த நன்றியைக் கொன்ற பாவியர்க்கு எஞ்ஞான்றும் உய்தியில்லா கும். அப்பனே! 'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய் வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்பது பொய்யா மொழியன்றே? ஆகலின் ஐயன் திருவடிச் சேவை கொண்டு நன்னெறிப்படர்தி. வீயாது அடியுறை நிழலெனப் பெரு மானைப் பிரியாது வாழுதி. மன்னரென்பா ரெரியெனற்குரி யார்.

> 'இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
> ஒளியோ டொழுகப் படும்'

என ஆன்றோர் அரசர் மாட்டு யாமொழுக வேண்டுமுறை வகுத்தார். ஆதலின், இளையோய்! மன்னர், சிற்றடிமை குற்றம் பொறுப்பரென் றெண்ணவேண்டா. எவர்க்கும் பதவியை நல்கும் பண்ணவன் பணித்தன எவையே யாயினுமாகுக. அவை குறித்து நீ யாதும் சிந்தியாது அருமறை விளந்த ஆணையென மேற்கொண்டு, அவற்றைச்சிதையாது இயற்றுதி. இயற்றி, இத்தீர்வரும்பிறவிதீர்த்து விழுமிய பேறெய்துவான் அமைதி" என் றித்தகையவாய வுறுதிகள் யாவும் இயம்பி எதிர் நின்ற பேரெழில் தழைத்த மணிவண்ணனை நோக்கி, 'மன்னர் மன்னன் மாநிலமுய்யத்தந்த மாதவமைந்த! என் னிளவலாகிய இவனை இவன் சுற்றத்தோடும் உன்னடைக்கல மாகத் தந்தேன். ஏற்றுக்கொள்.' என்று கையிற்கொடுத்து உச்சிமேற் கரங்குவித்துப்பணிந்தான்.

## பதின்மூன்றும் அத்தியாயம்.

### வாலி அங்கதனை அழைப்பித்தல்.

பின்னர்த் தம்பியை நோக்கி, 'அருமருந்தனைய புதல்வனைக்கொணர்தி' என்றனன். எனலும், இளவலும் ஏவலாளரை அனுப்பி அங்கதனை அழைத்துவரச் செய்தான். ஏவலாளர்சென்று தந்தையாரழைத்தாரென்றனர். அதுகேட்டதும் காலந்தாழாது அங்கதனும் விரைவில்வந்தெய்தினான். அவனெய்தினமையைக் கம்பர்பெருமான் எவ்வாறு கூறுகின்றாரெனின், 'சுடருடை மதிய மென்னத் தோன்றினான்' என்கின்றார். இச்சொற்றொடர் நயத்தைக்காண்மின். அத்தகையான் 'யாண்டும் இடருடை யுள்ளத் தோரை எண்ணினு முணர்ந்தி லாதான்' எனவும் கவிச்சக்ரவர்த்தியால் உயர்த்திக் கூறப்பட்டுளான். அனையான் அந்தோ! பாவம்! காணவிருப்பதென்னைகொல்? நினைப்பினும் நெஞ்சங் கலங்குகின்றது. ஓ! கொடிய காட்சி! கரையிலாத் துன்பக்கடலை யன்றோ? என்னே! என்னே! உதிரவாரிக் கடலிடைக்கிடந்த காதற் றந்தையைத்துயர்முகங்கண்டறியாத தன்கண்களால்எதிர்பாராத வண்ணம் எதிரே கண்டனன். காண்டலும் விண்ணினின்றும் வீழ்வதோர் மீனென வீழ்ந்தான் தன்னருமைத் தந்தையின் மீது. அந்தோ! வீழ்ந்து யாதுந்தோன்றாம லயர்வுற்றான். இளையானவனைத் தேற்றுனர் யாரே! பின்னர் ஒருவாறு தெளிந்து கரைகடந்துவந்த துன்பப்பெருக்கை ஆற்றுதற்கியலாது வாய்விட்டு அழுது அரற்றுவானாகி, 'எந்தாய்! எந்தாய்! இவ்வெழுதிரை வளாகத்து யார்க்குஞ் சிந்தையால், செய்கையால் ஓர் தீவினை செய்திலாதாய்! நீயோ இப் பெருந்தீவினைக் காளாகி நொந்தனை? உலகத்து அறமிருந்தவாறு

நன்று. அதுநிற்க. நின்முகம்நோக்கிக் கூற்றும் வந்ததோ? அதன் வலியை முற்றக்கடந்த நின்னை அது எவ்வாற்றான் எய்தத் துணிந்ததோ? ஓ! ஓ! எளிமையுற்ற கூற்றிற்கும் வலிமையெய்தும் கால மெய்தியதுபோலும். ஆ! யான் கனவு காண்கின்றேனோ? இல்லை. இல்லை. இனி அதன் வலியை யஞ்சாது கெடுப்பார் யாவரே! உலகம் தாங்கிநிற்கும் எட்டுயர் யானைகளையும், அஞ்சாது எதிர்த்துப் போராடி, அவற்றின் மருப்புகளைத் தன் மார்பகத்து முறிய வேற்று அழகு பெறக் கொண்ட அக்கண்டகன் நெஞ்சமும், நின்கோல வாலின் வலி நிலை யுன்னுந்தோறும், பறையடிப்பதுபோலஅடித்து நடுங்கிக் குலையும் பயத்தை இனி யொழிப்பதாயிற்றே!'

'பஞ்சின்மெல் லடியான் பாகன் பாதுக மல்ல யாவும்
அஞ்சலித் தறியாச் செங்கை ஆணையாய்! அமரர் யாரும்
எஞ்சல ிருந்தா ருன்னால் இன்னமு தீந்த நீயோ
துஞ்சினை வள்ளி யோர்கள் நின்னலின்யார் சொல்லற் பாலார்?'

என்பன பலவுஞ்சொல்லிப் புலம்பினன். எரியின் இழுதா யினன். வேர்த்தான். கைகளால் முகத்தை மோதினன். விம்மிப் பொருமினன். அயர்த்தான். ஓ! தெய்வமே! இக் கொடிய காட்சியைக் காணவோ யான் பிறந்து வாழ்ந்தேன் என்றான்.

## வாலியின் வீடுபேறு.

இவ்வாறு அழுதரற்றும் புதல்வனைப் புல்லி யொருவாறு தேற்றி, இராமனைக் காண்பித்து, 'நாயகனாகிய இராமன்செய்த நல்வினைப்பய னித்தெனத் தேர்தி. எனக்கு இவ் வீரன்வந்து வீடுதந்தான். ஆதலால் பிள்ளைமைக் குணத்தைத் தவிர்தி. என்சொல் பற்றுதி. பிறவி நோய்க்கு மருந்தெனவந்த இவ்

வேந்தல் பெருமானை, மைந்த! வணங்குதி. என்னுயிர்க்கு இறுதிசெய்தா னென்பதை யிறையும் எண்ணாது, இவனுக் கேவல்செய்து, உன்னுயிர்க் குறுதிதேடுதி. இவ்விராமனுக்கு அரக்கரோடும் அமர்வந்துறுமேல், அக்காலை நீ முன்னணியில் நின்று போர்புரிதி. இவனடியிணைப் போதுகளை யிடையறாது சிந்தித்து வாழ்தி!' என்றின்ன வுறுதிகள்யாவுஞ் சொன்னான். பின்னர் இராகவனை நோக்கி, 'என் மைந்தனிவன். அரக்கரெனும் பஞ்சிற்குத் தீயொத்த தோளினன். தொழிலுந் தூயன். இவனையும் உன்கையி லடைக்கலமாகத் தந்தேன்' என்று இராமனுக்குக் காட்டினான். அங்கதனும் இராமனது அடியிணைகளில் வீழ்ந்து பணிந்தான். பணிந்தவனை யெடுத்துப் புல்லி, இராமனும் தனது பொன்னுடை வாளை நீட்டி, 'நீ யிதுபொறுத்தி' எனத் தந்தனன். அதனை அங்கதனும் ஏற்றான். இராமன் அங்கதனை யேற்றுக்கொண்டமையைக் கண்டு மனமகிழ்ந்து குறையெல்லாம் நீங்கப்பெற்றவனாய், இராமனது திருவடிக்கமலத்தில் சிந்தைவைத்து, உலகேழும் ஏத்த வாலி உயிர்துறந்து வானுக் கப்புறத்துலகனானான். உயிர் நீங்கியதனால் தளர்ந்த வாலிகையினின்றும் அம்பானது விசைத்தெழுந்து, அவன் மார்பகத்து ஊடுருவிச் சென்று பின்னர்க் கடலிற்குளித்து இராமனுடைய அம்பறாத் தூணியில்வந்து புக்கது.

## அங்கதன் நீர்க்கடன் முடித்தல்.

இஃதிங்ஙனமாக, வாலியிறந்து பட்டமையை அவன் மனைவி கேள்விப்பட்டாள். விரைந்து ஓடிச்சென்று கணவனைக்கண்ணுற்று, கண்ணீர் ஆறுபோற்பெருக அழுதாற்றிச் சோகம் தாங்கமாட்டாதவளாய், அவன்மேல் வீழ்ந்தாள்.

புரண்டாள், விம்மினாள். 'யானெவ்வளவோ தடுத்துரைத்தும் கேளாது, இராமனைப்புகழ்ந்து அவன் அவ்வண்ணஞ்செய் யான். அவனைப்போற்றாது கூறினை. நின் பெண்மையாற் பிழைத்தனை என்று என்னைச்சினந்து கூறிவந்து அவனா லுயிர்துறந்தனையே! யானினி யுன்னை என்று காண்பேனோ, என்றின்ன பலவும் புலம்பி ஏங்கினாள். அதுகண்ட மாருதி சேடியரைக்கொண்டு தாரையை அந்தப்புரத்திற்கனுப்பினான். அங்கதனை யழைத்து அவன் தந்தைக்குச்செய்யவேண்டிய ஈமக்கடன்களைச்செய்யுமாறு பணித்தான். அங்கதனும் முறைப் படியே தந்தைக்கு நீர்க்கடன் நேர்ந்தான்.

## சுக்கிரீவனைக் கவிக்குலக்காவலனுக்குதல்.

சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டு மென அநுமன் முதலியோர் இராமனை வேண்டிக் கொண்டனர். இராமனும் மாருதியை நோக்கி முடிபுனை தற்குவேண்டிய யாவும் சித்தம் செய்வாயாக எனப் பணித்து, தன் தம்பியை நோக்கி, 'சூரியகுமாரனான சுக்கிரீ வனுக்கு ஐயனே! உன்கைகளாலே வேதமுறைப்படி மகுட தாரணம் செய்வாயாக' என்றான். மாருதி, கங்கையிற்புனித மாய புண்ணிய தீர்த்தங்களையும், ஓமத்திற்குவேண்டிய மங் கலப்பொருள்களையும், பொன்முடியையும் கொணர்ந்தான். அந் தணர் ஆசிகூற, அந்தரத்தமரர் நான்மலர்தூவி வாழ்த்த, தருமங்களிகூர, தருமமூர்த்தியாகிய இராமபிரான் திருமுன்பு இளையோனாகிய இலக்குவன் விதிப்படி சுக்கிரீவனுக்குமௌலி சூட்டினான். பின்னர், முடிபுனைந்த சுக்கிரீவன் இராமனது திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினான். அவனையெடுத்து மார்போ டணைத்து ஆசிவழங்கி, இராஜ தருமங்களை இராமன் அன்போ

டெடுத்துக்கூறினன். சுக்கிரீவன் அவற்றைப்பணிவோடு கேட்டு, இராமனைப்பணிந்து தன்னோடு கிட்கிந்தைக்கு வந்து ஆண்டு வதியுமாறு வேண்டிக்கொள்ள, 'தந்தை கட்டளையைக்கடந்தவனேன் நின்னோடு நாட்டிற் புகுவேனையாயின்' என இராமன் மறுத்துரைத்தான். சுக்கிரீவன் அம்மொழிகேட்டு ஒருவாறு மனந்தேறி இராமன்பால் விடைபெற்றுக்கொண்டனன். பின்னர், அங்கதன் முன்வந்துஇராமன் திருவடிகளைவணங்கினனாக, இராமனும் அவனை யன்போடெடுத்துச் 'சுக்கிரீவனை உன் சிறிய தந்தையென்று கருதாமல், உன் தந்தையெனவே மேவி வாழ்வாயாக' என்றின்ன சில நன்மதிகள்கூறி அனுப்பினன். மாருதி அருகில் வந்து பணிந்த காலை, இராமன் அவனை நோக்கி, 'அன்புடையுள்ளத்தைய! நீயும் சுக்கிரீவனோடு கிட்கிந்தைசென்று, அவனுக்குவேண்டு முதவிகளைச்செய்வாயாக' என்றனன். எனலும், அநுமான் இராமனைநோக்கி, 'ஐய! அடியனேன் இவ்விடமே இருந்து தங்கட்குவேண்டும் பணிவிடையியற்ற விழைகின்றேன். ஆண்டுச்சுக்கிரீவனுக்குவேண்டுவசெய்தற்குரியார் பலருளர். அதனல் இவ்விடமே யானிருக்கத்திருவுளம்பற்றல் வேண்டும்' என்றான். இராமனும் அவன் அன்பின்பெருமையைப் பாராட்டினன். என்றாலும் அவனைத்தன்னருகிலேயே இருத்திக்கொள்ள மனமிசையவில்லை. அதனல் அவனைநோக்கி'

'நிரம்பினன் ஒருவன் காத்த நிறையா சிறுதி நின்று
வரம்பிலா ததனை மற்றோர் தலைமகன் வலிதிற் கொண்டால்
அரும்புவ நலனுந் தீங்கும் ஆகலி னைய நின்போற்
பெரும்பொறை யறிவி னோரால் நிலையினைப் பெறுவ தம்மா'

'ஆன்றவர்க் குரிய தாய அரசினை பிறவி யப்பால்
என்றெனக் குரிய தான கருமமு மியற்றற் கொத்த
சான்றவர் நின்னி னில்லை யாதலால் தருமந் தானே
போன்றநீ யானே சொல்ல அத்தலை போதி' என்றான்.

அநுமானும் அதற்கிசைந்து இராமனை வணங்கிப்போனான். ஆக, வானர வீரரெல்லாரும் தலைவனோடு கிட்கிந்தைபுக்க கிட்கிந்தையிலே, சுக்கிரீவன் வளவரசெய்தி, மற்றை வான வீரர் யாருங்கிளைஞரொப்ப உதவிசெய்ய, செங்கோலோச் அளவிலா ஆற்றலும், ஆண்மையும் படைத்த அங்கதன் இள வரசியற்றுமாறுபணித்து, இனிதின் வாழ்வதானான். இப்பால், இராமனோ தன்னிளவலோடும், மதங்கமுனிவர தாச்சிரமத் துள்ள ரிஷியமூகபர்வதத்தின் ஒருபால் மேவி, தம்பியால் அமைக்கப்பட்ட பர்னசாலையில் இனிதிருந்தான்.

---

## பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 14 | அஞ்சனை | அஞ்சனைச் |
| ,, | 24 | ,, | ,, |
| 14 | 1 | இராமரும் விலக்குமண | இராம விலக்குமணர் |
| 35 | 14 | இந்திரனருளி யமைந்து | இந்திரனருளிய மைந்து |
| 36 | 5 | போராற்ற | பேராற்ற |
| 37 | 24 | விருக்க | விறுக |
| 71 | 5 | பின்னர் | பின்னர்த் |

80-வது பக்கத்தில் பேரெழில் தழைத்தவீரன் என்று தொடங் கும் பாராவிற்கு, வாலிவினவல் என்பதைத் தலைப்பெயராக வமைத் துக்கொள்க.